# கிராமங்களில் கடவுள் வழிபாடு

36
14



— டாக்டர் க. தர்மரெட்டி

# கிராமங்களில் கடவுள் வழிபாடு

ஆசிரியர் :
டாக்டர் ந. தர்மாரெட்டி
எம்.ஏ , பிஎச்.டி., வித்வான்,
தமிழ்த்துறை
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்.
திருப்பதி-517 502.

வெளியீடு :
ராஜேஷ் பதிப்பகம்
202, ஜி. கெ. கெ. தெரு
திருப்பதி

டாக்டர் பொன். சௌரிராஜன்
எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ்ப் பேராசிரியர்.
திருவேங்கடவன் பல்கலைக்கழகம்,
திருப்பதி,

# அணிந்துரை

நல்லது, இனியது மட்டுமின்றி அல்லது, இன்னாது ஆகியனவற்றையும் பாடுபொருளாகக்கொண்டு வாழ்ந்து வளர்ந்துவருவன நாட்டுப்புறப் பாடல்கள். ஆங்காங்கு வாழுகின்ற, அன்றன்று வாழுகின்ற மக்களினத்தின் மன உணர்வுகளை அப்படியே ஒளிவு மறைவு இன்றி எடுத்துரைப்பன அவை. மானுடவியல், உளவியல், சமுதாயவியல் கூறுகளைச் சரியாக எடைபோட்டுக் கூறச் சிறப்பான மூலச் சான்றுகளாகத் திகழ்வனவும் அவையே. இவ் வகையில் ஆந்திராவில், சிறப்பாக இராயலசீமைப் பகுதியில் வழங்கிவரும் கிராமத் தெய்வங்கள் பற்றிய பாடல்களையும் அவற்றின்வழி அறியலாகும் வழிபாட்டுச் சடங்குகளையும் திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழக இணைப் பேராசிரியர், துறைத் தலைவர் முனைவர் ந. தருமா ரெட்டியார் இந்த நூலில் தந்துள்ளார்.

நாட்டுப்புறவியல் அறிமுகம், கங்கம்மா விழா பற்றிய செய்திகள், கிராமப்புற ஆண் தெய்வங்கள், பெண் தெய்வங்கள், தெலுங்கு நாட்டுப்புற இலக்கியத்தில் தெய்வப் பாடல்கள் ஆகியன பற்றிய கருத்துகள் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன.

இவற்றுள் கங்கம்மா பற்றிய செய்திகள், ஆந்திர கிராமப்புறப் பெண், ஆண் தெய்வங்கள், தெலுங்கு நாட்டுப்

புற இலக்கியத்தில் தெய்வப் பாடல்கள் தமிழ்கூறும் நல்லுலகத்திற்கு இந்த ஆசிரியர் வழங்கும் நன்கொடை எனலாம்.

இந்தப் பகுதிகளில் கிராமப்புறத் தெய்வ வழிபாட்டிற்குப் பின்புலமாய்த் தோன்றி வளர்ந்துள்ள கதை பலவற்றை ஆசிரியர் தந்துள்ளார். அவற்றுள் சக்தி தெய்வங்கள் மண்ணுலகுக்கு வந்தகதை (பக்-8), இரேணுகா தேவி கதை (பக்-10) கங்கம்மா பற்றிய கதைகள் (பக்.19.20), பாண்டவர் கதை (பக்-65) முதலியன குறிப்பிடத்தக்கன.

இராயலசீமைப் பகுதியில் விளங்கும் பெண் தெய்வங் களாக அங்கம்மா, அக்கம்மா, அக்ககாரு முதலிய தெய்வச் செய்திகளை (பக்-17, 18) இங்குத் தொகுத்தளித்திருப்பது ஆசிரியர்தம் பெரும் முயற்சியைப் புலப்படுத்தவல்லது. இவ்வாறே கிராமப்புற ஆண் தெய்வங்களையும் (பக்-18) ஆசிரியர் தொகுத்து அளித்துள்ளார். இவை தமிழக கிராமப் புறத் தெய்வங்களோடு ஒப்பிடத்தக்கவை.

கங்கம்மா விழா பற்றி ஆசிரியர் தரும் செய்திகள் சிறப்பானவை. இந்தப் பகுதியில் பல ஊர்களில் நிகழும் கங்கம்மா பண்டிகை பற்றித் தரவு பல திரட்டி வகை தொகை செய்து ஆசிரியர் வழங்கும் செய்திகள் பாராட்டு தலுக்குரியன. கங்கம்மா பண்டிகைக்கு வேடம் தரித்தல் பற்றி ஆசிரியர் கூறும் காரணங்கள் அறியத் தக்கன. சாட்டு (காப்புக் கட்டுதல்), கங்கம்மா உருவாக்கம், விழா, பலியீடு தொடங்கி ஒரு நிகழ்ச்சிகூட விடாமல் அனைத்தையும் தொகுத்து ஆசிரியர் அளித்துள்ளார்.

இந்த நூல்வழி வழிபாடு, சடங்குகள் மட்டுமின்றி இங்கு வாழும் பாமர மக்களின் நம்பிக்கையையும் ஆசிரியர் ஆங்காங்கே பொருத்தமுறக் கொடுத்துள்ளார். காட்டாக கங்கம்மாவுக்குப் பலியிடுதலைக் குறிப்பிடலாம்.

பலியிட்ட உயிரின் இரத்தத்தைச் சோற்றில் கலந்து அதைப் "பொலியோ பொலி" என்று சொல்லிக்கொண்டு கழனிகளில், மாட்டுக் கொட்டகைகளில், ஊர் வெளிப்புறங் களில் சிதறுவார்கள். இச் சோறு இட்ட இடங்களில் யாதொரு தீங்கும் விளையாமல் நன்மை விளையும் என்பது அவர்களின் நம்பிக்கை (பக். 33).

கங்கம்மா பண்டிகையில் பூணப்பெறும் பைராகி வேடம், தோட்டி வேடம், பண்ட்ரோத்து வேடம், தொர வேடம், மாதங்கி வேடம் முதலியன பற்றிய விரிவான செய்திகளும் (பக்-38,39,40) இந் நூலில் இடம் பெற்றுள்ளன. சிலப்பதிகார வேட்டுவ வரியில் கொற்றவை வேடம் பூண்டது இங்கு ஒப்பவைத்தது நினைவு கூரத்தக்கது.

கிராமப்புறங்களில் பாண்டவர் கதை, நாடகம் (பக். 65) எவ்வாறு நிகழ்கின்றன என ஆதியோடு அந்தமாக அவை பற்றிய பல செய்திகளை ஆசிரியர் தந்துள்ளார். தெருக் கூத்து பற்றிய ஆய்வுக்கு அவை ஓரளவு பயன் தருவன.

இறுதியாகத் தெலுங்கு நாட்டுப்புற இலக்கியத்தில் இடம்பெறும் தெய்வப் பாடல் பற்றி ஆசிரியர் தரும் அறிமுக உரை ஒப்பிலக்கியப் பாங்கு கொண்டது; இவ்வகை யில் ஆயும் தமிழ் அறிஞர்க்கு அவை பெரிதும் உதவுவன.

பின் இணைப்பில் ஆசிரியர் தொகுத்துத் தமிழ் எழுத்துக்களில் தந்துள்ள தெலுங்குப் பாடல்கள் மூலச் சான்றுகளாகப் பிற தமிழ் ஆய்வுகளுக்குக் கொள்ளத் தக்கன.

மொழி பெயர் தேயங்களில் பணிபுரியும் தமிழ்த் துறையினர் இவ்வாறு ஆங்காங்கு வழங்கும் மொழி சார்புடைய, ஆங்காங்கு வாழும் மக்கள் சார்புடைய இலக்கியப் பணிகளில் ஈடுபடுவது தமிழ் ஒப்பிலக்கிய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும் நல்ல பணியாகும்.

இத்தகு நல்ல பணி பல செய்து நூல் பல இயற்றித் தமிழ்கூறும் நல்லுலகம் போற்றுமாறு சிறப்புற நூலாசிரியரை வாழ்த்துகிறேன். இதன்கண் அமைந்துள்ள புதிய செய்திகளைப் பெற்றுத் தமிழ் ஆய்வுலகம் நாட்டுப்புற ஒப்பிலக்கிய வளர்ச்சியில் சிறப்புற வேண்டுமெனத் தமிழ் அறிஞர்களை வேண்டிக்கொள்கிறேன்.

— டாக்டர் பொன். சௌரிராஜன்

# முன்னுரை

இலக்கிய உலகில் நாட்டுப்புற இலக்கியத்திற்கு இன்று ஒரு சிறந்த இடம் தரப்பெற்றுள்ளது.

நாட்டுப்புற மக்கள் நாள்தோறும் உழைத்து வாழும் வாழ்வுடையவர். தம் உடலுழைப்பால் உண்டாகும் துன்பங்களை மறப்பதற்காகப் பலவகையான பாடல்களைப் பாடிக்கொண்டே பாடுபடல் அவர்தம் இயல்பு. தாம் துன்பமின்றி வாழவும், துன்பங்கள் தீரவும், தம் செயலில் குற்றம் குறை நேராதிருக்கவும் தமக்குத் துணையாக ஒருசக்தியை அவர்கள் நாடி வணங்கினர். அந்தச் சக்திக்குக் குறிப்பிட்ட சில நாட்களில் திருவிழாக்களை நடத்திவந்தனர்; வருகின்றனர்.

அவ்வகையில், இந் நூலில், ஆந்திரத்தில் உள்ள இராயலசீமா பகுதியில்—சிறப்பாகச் சித்தூர் மாவட்டக் கிராமங்களிலும், சித்தூர் மாவட்டத்திற்கு அருகிலுள்ள தமிழகத்துக் கிராமங்களிலும் உள்ள கிராம மக்கள் தெய்வங்களுக்குப் பக்தியுடன் செய்யும் பூசைகள், திருவிழாக்கள் பற்றிய செய்திகள் சொல்லப்பெறுகின்றன.

இவை திருவிழா நாட்களில் இப் பகுதிகளுக்கு நான் சென்று கண்ணால் கண்டும், பெரியோரை உசாவித் தெரிந்துகொண்டும் சேகரித்த செய்திகளாகும்.

நாட்டுப்புறவியல் அறிமுகம் என்னும் முதல் பகுதியில் நாட்டுப்புறவியல்—விளக்கம்—நாட்டுப் புறவியல் ஆராய்ச்சி இந்தியாவில் பொதுவாகவும், தமிழகத்தில் சிறப்பாகவும்' செய்யப்பெற்றுவருதல் – நாட்டுப்புற மக்களின் சமயம் பற்றிய செய்திகள்—கிராமத் தெய்வங்கள் தோற்றம்—கிராமத் தெய்வங்களைத் தொழுவதற்குரிய காரணங்கள்—கிராமத் தெய்வங்களை வீட்டுத் தெய்வங்கள், குல

தெய்வங்கள், ஊர்த் தெய்வங்கள் என்றும் பெண் தெய்வங்கள், ஆண் தெய்வங்கள் என்றும் பாகுபடுத்திக் கிராம மக்கள் வணங்குதல்—பெண் தெய்வங்களுள் கங்கம்மா தெய்வத்தைச் சிறப்பாக வணங்குதற்குரிய காரணங்கள்—அவள் பிறப்புத் தொடர்பாக வழக்கத்தில் உள்ள செய்திகள் முதலியன விளக்கமாகக் கூறப் படுகின்றன.

'கங்கம்மா விழா பற்றிய செய்திகள்' என்ற பகுதியில் கங்கம்மா விழா கிராமங்களிலும், இன்று நகரங்களாய் மாறிய கிராமங்களிலும் நடைபெறும் முறைகள் விளக்க மாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. திருப்பதியில் கங்கம்மா விழா நடைபெறும் முறை சிறப்பாகவும் விளக்கமாகவும் சொல்லப் பட்டிருக்கின்றது.

அடுத்து, அக்கம்மா முதற்கொண்டு மாரியம்மா வரை உள்ள 18 பெண் தெய்வங்களையும் போதுராஜா, தருமர், அனுமார், பிள்ளையார், காட்டமராஜா, முனீஸ்வரன், வீரன்ன, கருப்பசாமி முதலான ஆண் தெய்வங்களையும் கொண்டாடி வணங்கிவருகின்ற செய்திகள் பற்றி கூறப் பட்டுள்ளன. தமிழகத்திலும் ஆந்திரத்திலும் பாரதம் சொல்லுதல், தருமர் விழா சிறப்பாக நடைபெறுதல் பற்றிய செய்திகள் காரண காரியங்களோடு தெளிவுறுத்தப் படுகின்றன.

அதற்கடுத்து கிராமத் தெய்வ விழாக்களின்போது இப் பகுதி கிராம மக்கள் பாடும் தெய்வப் பாடல்களின் தனித் தன்மையைப் புலப்படுத்தும் நோக்கில் ஒருசில பாடல்கள் வகைப்படுத்தி எடுத்துக்காட்டாகத் தரப்பட்டுள்ளன. பின்னிணைப்பு 1, 2இல் சில தெலுங்கு கிராமத் தெய்வப் பாடல்களும் அவற்றிற்குத் தமிழில் விளக்கமும் கொடுக்கப் பட்டுள்ளன.

தெலுங்கு நாட்டிற்கே உரிய தமிழில் வழக்கில் பயிலாத சிலசெய்திகளும் சிலசொற்களுக்குப் பொருளும் பின்னிணைப்பு 3-இல் விளக்கப்பெற்றிருக்கின்றன.

கிராமங்களைக் குறித்து நிற்கும் 'நாட்டுப்புறம்' என்ற தொடர் இப்பொழுது பெரிதும் நாட்டுப்புற இலக்கிய ஆய்வு களில் ஆளப்பட்டு வருவதால் நானும் அத் தொடரையே இந் நூலில் ஆண்டுள்ளேன்,

வேதக் கடவுளர் என்ற குறிப்பு வேதங்களை ஏற்று வைதீக நெறியில் வணங்கப்பெறும் திருமால், சிவபெருமான் முதலிய கடவுளர்களைக் கருதியது ஆகும்.

இந் நூலைச் செவ்வனே வெளியிடுவதற்குத் திருவேங்கடநாதன் அருளால் திருப்பதி திருமலை தேவத் தான ஆட்சிக் குழுவினர் நிதியுதவி அளித்தனர். அக் குழுவிற்கு என் நன்றிகள் பல. இந் நூலுக்குப் பொருத்த மான அணிந்துரை கொடுத்து என்னை நெஞ்ச நிறைவோடு வாழ்த்தியருளிய பேராசிரியர் பொன். சௌரிராசன் அவர்கள் அன்புக்கு நான் என்றும் கடமைப் பட்டுள்ளேன்.

நல்லமுறையில் குறித்த காலத்தில் நூலை அச்சிட்டு உதவிய மாருதி அச்சகத்தார்க்கு என் நன்றி.

எதிர்பாராமல் நிகழ்ந்த அச்சுப் பிழை சிலவற்றுக்கு வருந்துகிறேன்; பின் இணைப்பில் திருத்தம் தந்துள்ளேன்.

திருப்பதி
செப். 1990

டாக்டர் ந. தர்மாரெட்டி

# உள்ளுறை

# கிராமங்களில் கடவுள் வழிபாடு

## நாட்டுப்புறவியல் அறிமுகம்

செம்மைப்பட்டது, செம்மைப்படாதது என்று எதிலும் உண்டு; எங்கும் உண்டு. மக்களிலும் இந்த வேறுபாட்டைக் காணலாம். படித்தவன், படிக்காதவன்; அறிந்தவன், அறியாதவன்; என்னும் வேறுபாடு மக்களில் உண்டு. பெரும்பாலும் படிக்காதவர்கள், அறியாதவர்கள், கிராமங்களில் வாழ்கின்றனர்; எனவே அறியாதவர்கள் அதாவது பாமரமக்கள் வாழும் இடங்களே கிராமங்கள் என்று சொல்லலாம்.

இந்தக் கிராம மக்களின் வாழ்வியலே நாட்டுப்புற இயலாகும். இதன்கண் உணவு, உடை, ஆடல், பாடல், காணல், கற்றல், வணங்குதல்—போன்ற பண்பாடுகள் பல அடங்கும். ஆயினும் ஆடல், பாடல் முதலிய சில, நாட்டுப்புறக் கலைகளாகக் கொள்ளப்பட்டன.

அலன்டன்டீஸ் (Alendundes) என்பவர், புராணக் கதைகள், நாட்டுப்புறக் கதைகள், வேடிக்கைப் பேச்சுக்கள் பழமொழிகள், விடுகதைகள், நாடோடிப் பாடல்கள்,

வாழ்த்துக்கள், பழக்கவழக்கங்கள். நாட்டுப்புற ஆடல் பாடல்கள், நம்பிக்கைகள், நாட்டுப்புற மருத்துவம் முதலியன - நாட்டுப்புற இயலில் அடங்குவதாகக் கூறுகிறார்.

நாட்டுப்புற இயலை நாட்டுப்புற மக்களின் மரபு வழிப்பட்ட படைப்புக்கள் (Traditional creations) என்பர்; நாட்டுப்புற மக்களின் கதைகளை ஆராயவேண்டும் என்ற எண்ணம் முதன்முதலில் மேனாட்டில்தான் தோன்றியது. நாட்டுப்புறவியல் - ஆராய்ச்சியின் முதல் நிலையில் பொதுமக்களைச் சார்ந்த மரபு முறைகள் (Popular antiquities) என்ற பெயரிலும், பொதுமக்கள் இலக்கியம் என்ற பெயரிலும் (Popular literature) பொது புராணவியல் (Common mythloogy) என்ற பெயரிலும் வழங்கப்பட்டது. கி.பி. 1846-இல் வில்லியம் ஜான்தாமஸ் என்பவர் (William John Thomos) போக்லோர் (Folklore) என்ற சொல்லை உண்டாக்கினார்.[1] இச் சொல் மனிதனின் சடங்குமுறைகள், நம்பிக்கைகள், கதைப் பாடல்கள், பழமொழிகள். நாட்டுப்புறப் பாடல்கள் முதலிய பகுப்பைக் குறிக்கும் நிலையில் அவர் கொண்டார்.

போக்லோர் (Folklore) சொல்லாராய்ச்சிப் பெரிதும் நடைபெற்றுள்ளது. ஏறக்குறைய உலகிலுள்ள நாகரிக நாடுகள் அனைத்தும் இம் முயற்சியை மேற்கொண்டு உள்ளன. மரியலீக் பதிப்பித்த (Standard dictionary of Folklore Mythology legend) 'ஸ்டான்டர்டு டிக்ஷனரி ஆப் போக்லோர் மைதாலஜி லெஜன்டு' என்ற நூலில்

---

1. Tritram Coffin Illed American Folklore Pennasalvania, P. 19.

இருபத்தொரு நாட்டுப்புற அறிஞர்கள் கொடுத்த விளக்கங்கள் இடம்பெற்றுள்ளன.[1] இவ்வனைத்து அறிஞர்களின் ஒட்டுமொத்த கருத்தாக 'போக்லோர்' என்ற சொல்லுக்கு வாய்மொழியாகப் பரப்பப்படும் இலக்கியம் என்று விளக்கம் கொடுக்கலாம். இவ் விளக்கம் பெரும்பாலோரால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

'போகலோர்'—சொல்லுக்கு ஈடாகத் தமிழில் நாடோடிக் கலை, நாடோடி இலக்கியம், நாடோடிப் பாடல், நாட்டுப்புறப் பாடல்கள், வாய்மொழி இலக்கியம், நாட்டார் வழக்காறு, நாட்டுப்புறவியல் முதலிய பெயர்கள் வழங்கி வருகின்றன. இவற்றுள் 'நாட்டுப் புறவியல்' சொல்லே பொருத்தமானதாகும். இச் சொல் பழங்கால நாட்டுப்புற மக்களின் மரபுவழிப் படைப்புக்கள் அனைத்தையும் ஒன்றுசேர்த்துக் குறிக்கிறது.

இந்தியாவில் நாட்டுப்புறவியல் பற்றிய ஆராய்ச்சி இன்று வளர்ந்துவரும் நிலையில் உள்ளது; இப்பொழுது இத் துறை சமூகவியல், மானிடவியல், உளவியல், தத்துவம், வரலாறு, மொழியில்—ஆகிய துறைகளுடன் பின்னிப் பிணைந்து வளர்ந்து வருகிறது.

நாட்டுப்புறக் கலைகள் மக்களின் நாகரிகத்தை, பண்பாட்டை, பழக்க வழக்கங்களை, வரலாற்றை உண்மையான முறையில் எடுத்துக்காட்டுகின்றன. அந்தந்த சமுதாய வளர்ச்சி நிலையை மேற்சொன்ன நிலைகளில் அறிவிக்கும் கண்ணாடியாய் நாட்டுப்புறவியல்

1. The Study of Folklore University of California Engle wood cliffs. P. 5.

அமைந்துள்ளது. ஏட்டிலே வாராத எழுத்திலே காண முடியாத உள்ளத்தில் ஊறிக்கிடக்கும் எத்தனையோ எண்ண எழுச்சிகளுக்கும், பழக்கவழக்கங்களுக்கும் இது இடமாய் அமைந்துள்ளது. வடிவமைப்பில் இவை இடம் பெறுவதற்குமுன் மக்களின் வாழ்விலே பல தலைமுறை களாக வாழ்ந்திருக்கவேண்டும்.

தமிழ் இலக்கியம் பொறுத்தவரை தொல்காப்பியத் திலேயே நாட்டுப்புற இலக்கியத்தைக் குறிக்கும் சொற்கள் ஆளப்பட்டுள்ளன. எல்லா மொழிகளிலும் முதன்முதலாய்த் தோன்றிய இலக்கியங்களில் இத் தன்மையைக் காணலாம்.

இந்த நாட்டுப்புறவியலால் அக்கால மக்களின் சமயம், சமயம் தொடர்பான தெய்வ வழிபாடு பற்றியும் அறிந்துகொள்ளலாம். நாட்டுப்புற மக்கள் தெய்வத்தை வணங்குவதில் வெவ்வேறு நெறிகளை மேற்கொள்ள லாயினர். ஒவ்வொரு நெறியும் தனித்தனி பெயர் கொண்டு வழங்கலாயின.

## சமயம்

'சமயம்' என்பதற்கு மனித சக்திக்கு மீறிய சக்திகளைப்பற்றிய மக்களின் எண்ணங்கள் என்று சுருக்க மாய்ச் சொல்லலாம். சமயத் தோற்றத்திற்கு நம்பிக்கை களே காரணமாகலாம்; நம்பிக்கைகளின் படிப்படியான வளர்ச்சியால் சமயம் தோன்றியிருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் நம்பிக்கைகளின் குறியாய்ச் சமயத்திலும் வேறு வேறு பெயர்கள் உண்டாயிருக்க வேண்டும்.

இந்து சமயம் வேத காலம், சிந்துவெளி நாகரிக காலங்களுக்கு முன்னரே அநாதியாகவே இந்திய மக்களின்

வாழ்வோடு பின்னிப் பிணைந்து பல மாற்றங்களை அடைந்து வளர்ந்துவருகிற ஒன்றாகும். வேதகாலத்து வேதங்கள் இந்து சமய வரலாற்றில் இடைஞ்சலாக எழுந்த நாத்திக வாதங்களைக் களைந்தெறிந்து தெய்வ உணர்ச்சியை நிலைநாட்டி இந்து சமயத்தைக் காத்தன. இக்காலத்தில் பலவகையான தேவர்கள் முதன்மை பெற்றிருக்கிறார்கள். அதற்கடுத்த புராண, இதிகாச காலங்களில் பல தெய்வங்களின் முதன்மை குன்றி விடுகிறது. சிவ, விஷ்ணுவின் பரத்துவம் படிப்படியாய் நிலைநிறுத்தப்படுகிறது.

நாட்டுப்புற மக்களின் நிலையில் இத்தகையதொரு சமயநிலை காணப்படவில்லை. பரம நிலையை நினைவூட்டுவனவாயும், அதனை அடைவதற்கு உகந்தனவாயும் அமைந்த நம்பிக்கைகளின் ஒட்டுமொத்தமே கிராம மக்களின் சமய நிலையாக அமைகிறது. கிராம மக்களிடத்தில் இவ்வுலக நிலையைக் காட்டிலும் பரலோக நிலையே அதிகம் காணப்படுகிறது என்று சொல்லலாம். இதனால் இவர்கள் மனித சக்திக்கு மீறிய சக்திகள் பலவற்றைப் பூசிக்கலாயினர்.

நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டிற்கும் (இந்து தெய்வ வழிபாடு) பெருந்தெய்வங்களாகிய திருமால், சிவன்—வழிபாட்டிற்கும் பெரும் வேறுபாடு உண்டு.

ஓர் அறிஞர் நாட்டுப்புற மக்களின் சமயங்கள் நாட்டுப்புற மக்களோடு நெருங்கிய தொடர்புடையவை என்றும் அச் சமயங்கள் இவ்வுலகத்தில் ஐந்தாயிரத்திற்கு மிஞ்சி இருப்பதாயும் குறிப்பிடுகிறார். இந்த மதங்கள் தமக்கென்று வெவ்வேறு நம்பிக்கைகளையும் தன்மைகளை

யும், தனிச் சிறப்புகளையும், தனிப்பட்ட மனித இனத்தையும் பெற்றிருக்கின்றன. இவ்வாறு இருப்பினும் அவர்கள் அனைவரிடத்தில் இருக்கும் நம்பிக்கைகளில் வேறுபாடு இல்லை.

இந்தச் சமய நிலையை இருவகைக் கோட்பாடாகக் கொள்ளலாம். 1. சித்தாந்த முறை (Theory) 2. செயல் முறை (Action) இவ் விரண்டில் இன்றைய சமுதாயத்தில் சித்தாந்த முறையே பெரிதும் மேற்கொள்ளப்படுகிறது. ஆனால் நாட்டுப்புறச் சமுதாயத்தில் செயல்முறைக்கே முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இவ் விரண்டு நிலைகளும் மனத்திற்கும் தெய்வ சக்திக்கும் தொடர்பு உண்டாக்குபவையாய் அமைவன. எனினும் செயல் முறையே மனிதனைத் தெய்வத்தோடு தொடர்புப் படுத்தத்தக்க ஒன்றாக நாட்டுப்புற மக்களிடையே திகழ்ந்துவருகிறது.

இப்படித் தெய்வத் தொடர்புக்கு மேற்கொள்ளும் செயல்கள் ஒவ்வொரு பகுதிக்கும் இனத்திற்கும் காலத்திற்கும் ஏற்றவாறு மாற்றம் பெற்றுவரும். சில இடங்களில் மனித உருப்பெற்ற தெய்வ கணங்கள் சிறப்பிடம் பெற்றன; மற்றும் சில பகுதிகளில் உருவற்ற சக்தி நிலைகளைச் சிறப்பாகப் போற்றலாயினர்.

### கிராமத் தெய்வங்கள் தோற்றம் வளர்ச்சி

எழுத்துருவாயன்றி வாய்மொழியாய்ப் பன்னூற்றாண்டுக் காலமாய் கிராம மக்களின் தொழுகைகளை ஏற்றுக்கொள்ளும் தெய்வங்கள் கிராமத் தெய்வங்கள் என்று பெயர் கொண்டு திகழ்ந்தன. கிராமத் தெய்வங்கள் நாட்டுப்புறத் தெய்வங்கள் என்று வழங்கி வருகின்றன. கிராமத் தெய்வங்களின் ஆராதனைக்குக்

காரணமாய் இருப்போர் கிராம மக்களே ஆவர். கிராம மக்களின் தெய்வத் தோற்றத்திற்கும் ஆராதனைக்கும் பல காரணங்கள் இருந்தன, இருந்துவருகின்றன.

'மக்கள் உழவுத்தொழில் அடிப்படையில் ஒரு குழுவாய் எப்பொழுது—அமைந்து வாழத் தொடங்கினார்களோ அப்போழுதே கிராமத் 'தெய்வங்களின் தோற்றத்திற்குரிய சூழ்நிலைகள் தோன்றலாயின என்று' ஹென்றி வைட் எட் (Henry White Head) என்பவர் கூறியுள்ளார்.[1]

கிராம மக்கள் தம் முன்னோராகிய இறந்தவர்களின் ஆவியை வணங்குகிறார்கள். ஆவிக்குச் சமாதி கட்டுகிறார்கள். இறந்தவர்களின் நினைவாக நாட்டப்பட்டிருக்கும் நடுகற்களையும் வணங்குகிறார்கள். சுமைதாங்கிக் கல்லையும் தெய்வமாக நினைத்து வணங்குகிறார்கள். தீக்குள் பாய்ந்து தாமாக உயிர் நீத்தோர் ஆவிகளையும் தெய்வமாக நினைக்கலாயினர். கணவன் இறக்க உடன்கட்டை ஏறிய பெண்களின் ஆவிகளையும் தெய்வமாகக் கருதினர்.

காலமில்லாக் காலத்தில் (முதுமை அமையாமல்) இறக்கும் உயிர்கள் பேயாக மாறித் தம்மையே சுற்றி வரும் என்ற நம்பிக்கை கிராம மக்களிடையே இன்றும் இருந்து வருகிறது. அந்தப் பேயால் தமக்கு யாதொரு தீங்கும் வாராவண்ணம் அந்தப் பேயையும் வணங்கினர்; வணங்கியும் வருகின்றனர். எனவே பேயும் தெய்வமாகக் கருதப்படலாயிற்று.

---

1. Henry White—The Village Gods of South India, Sun of Publications—New Delhi. P. 11.

கோயில்களிலோ மற்ற இடங்களிலோ சொற்பொழிவுகள் ஆற்றும்பொழுது வசதிக்கேற்ப கடவுளரைப் பற்றிய பல கற்பனைக் கதைகள் இடங்கொள்ளலாயின. இவை நாளாவட்டத்தில்—ஏட்டில் இடம் பெற்றன; மக்கள் வணங்கும் தெய்வங்களாகவும் திகழலாயின.

சான்றாக ஒரிரு கதைகள் இங்குச் சொல்லப் படுகின்றன.

அசுரர்கள் அரிய தவமிருந்து சிவபெருமானிடம் சாகாவரம் பெற்றார்கள். அவர்களால் மக்களுக்குத் தொல்லைகள் அதிகமாயின; எதிர்த்தோர் அனைவரையும் மாய்க்கலாயினர்; இதனால் மக்கள் தம்மைக் காப்பாற்றும்படிச் சிவபெருமானிடம் முறையிட்டனர். சிவன் தானும் மனிதனாகச் சென்று போரிட்டுப் பார்த்தான்; அவர்களை அழிக்க முடியவில்லை. சிவன் விஷ்ணுவிடம் முறையிட்டு இதற்கொரு வழியைக் கேட்டார். விஷ்ணு சிவனுக்கொரு வழியைக் கூறினார். அசுரர்களின் மனைவிமார்கள் எல்லோரும் பத்தினிகள்; இவர்கள் பத்தினிகளாக இருக்கும்வரை அவர்களைத் தேவர்களாலும் வெல்லமுடியாது. எனவே அவர்களின் பத்தினித் தன்மையை அழிக்கவேண்டும்; அதை அழிக்க ஓர் உபாயமுண்டு; இந்தப் பத்தினிகள் நாள்தோறும் ஒரு குளத்தில் குளிக்கிறார்கள்; குளித்து தம் பத்தினி மகிமையால் மணலைச் சேர்த்துக் குடமாக்கி, அதில் தண்ணீர் கொண்டு வருகிறார்கள் அதைக் கொண்டு சோறாக்கித் தம் கணவன்மாருக்குக் கொடுக்கிறார்கள்; அதை உண்ட அவர்கள் யாராலும் வெல்ல முடியாத பலத்தைப் பெறுகிறார்கள்.

அந்தப் பெண்களுக்குக் குழந்தைப் பேறு இல்லை: நீ அவர்களைத் தழுவிக் குழந்தைப் பேற்றைத் தந்துவிடு; அதனால் அவர்களின் பத்தினித் தன்மை நீங்கிவிடும்; அவர்களைத் தழுவுவதற்கு ஓர் உபாயமுண்டு; நீ அவர்கள் குளிக்கும் குளக்கரையில் அரச மரமாக இரு; நான் முனிவனாக இருப்பேன்; குளத்தில் குளித்ததும் என்னிடம் வருவார்கள்; நான் அரச மரத்தைத் தழுவுங்கள் உங்கள் குறை நீங்கும் என்று கூறுவேன்; நீயும் அப்பொழுது அவர்களைத் தழுவிக் குழந்தைப் பேற்றைக்கொடு என்று விஷ்ணு சொல்ல அவ்வாறே எல்லாம் நடைபெற்றன. இதனால் அவர்களின் பத்தினித் தன்மை நீங்கியதும் அசுரர்களும் பலத்தை இழந்தனர். ஆப் பெண்கள் அனைவரும் ஆளுக்கொரு பெண் மகவை ஈந்தனர். இதற்கொரு வழியைச் சொல்ல வேண்டுமென்று சிவனிடம் முறையிட்டனர். அதனால் இந்தப் பெண் பிள்ளைகள்—சிவனருளால்—பூமிக்குச் சக்திகளாக அனுப்பப்பட்டனர். பூமியில் தோன்றும்பொழுது அச் சக்திகள் வெவ்வேறு உருவங்கள்கொண்டு தோன்றலாயின; சிவனுடைய சக்திகளாக இந்த உருவங்கள் எண்ணப்படலாயின; இத் தெய்வங்கள்—கிராம மக்களால் இன்றும் தொழப்பட்டு வருகின்றன.[1]

இந்த உருவங்களின் தோற்றத்தைப் பற்றி இன்னொரு கதையும் வழங்கிவருகிறது. இக்கதையின்படி இவ் வுருவங்கள் எல்லாம் சிவனின் மனைவியர்களாக அதாவது சக்தியின் தோற்றங்களாகக் கருதப் படுகின்றன.

1. Andhrula Gnanapada Vignanam R.V. Sundaram Sahitya Acadamy Hyd. P. 328.

'திரிராக' என்ற ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு ஆண் குழந்தைகள் மட்டும் இருந்தன. பெண் மகவு இல்லை. பெண் மகவுக்காகப் பார்வதியை நீண்ட நாட்களாக வேண்டினான்; சிவனை நோக்கித் தவமிருந்தான். பார்வதி தானே வந்து அவன் மகளாகத் தோன்றுவதாக அறிவித்தாள். அதன்படி அவள் அரசனின் அரண்மனை அருகில் இருந்த ஒரு புற்றில் ஒரு புனிதமான குழந்தையாகத் தோன்றினாள். இச் செய்தி அரசனுக்குக் கனவில் தெரிவிக்கப்பட்டது. காலை எழுந்தவுடன் அரசன் புற்றைத் தோண்டி குழந்தையைக் கண்டு பேரானந்தம் கொண்டான். அக் குழந்தை சகல மரியாதைகளுடன் அரண்மனைக்குக் கொண்டுவரப்பட்டது. அந்தக் குழந்தையை 'ரேணுகாதேவி' என்ற பெயரில் அழைத்தனர். இந்த ரேணுகாதான் சக்திகளாக மாறி கிராம மக்களால் வழிபடப்படுவதாகச் செய்தி. 'ரேணுகா' காளிக்குச் சமமாகக் கருதப்படுகிறாள். இந்த இரண்டு கதைகளில் சொல்லப்படும் சக்திகள் சிவனுடன் தொடர்பு கொண்டவை. விஷ்ணுவுடன் தொடர்புகொண்ட சக்திகளும் கிராமத் தேவதைகளாக இருந்துவருகின்றன. இதற்கொரு கதை வழக்கத்தில் உள்ளது.

இக் கதையின்படி ரேணுகாதேவி சக்தி வடிவாய், விஷ்ணுவின் அவதாரமாகிய பரசுராமனின் தாய், ஜமதக்னியின் மனைவி, தந்திரிராக அரசனின் மகள் ஆகிறாள்.

அரசன் தந்திரிராகக்குக் காட்டில் வாழ்ந்து வந்த அரக்கர்களால் அல்லல்கள் அதிகமாய் ஏற்பட்டுவந்தன. அரசனுக்கே ஆபத்து ஏற்படும்போல் இருந்தது. அச் சமயத்தில் தேவதூதன் நாரதர் அங்கு வருகிறார்.

அரக்கர்களை எப்படியாவது கொன்றுவிட வேண்டும் என்று அரசன் கூற, அதற்கு அரசனைக் காட்டிலும் அவன் மகள் 'ரேணுகா' இதற்குத் தகுதியானவள் என்று நாரதர் கூறினார். அரசன் இதற்கு உடன்படாது, தானே போருக்குச் சென்றான். அரக்கர்களால் தன் தந்தை கொல்லப்படுவான் என்பதைக் குறிப்பால் அறிந்தாள் ரேணுகா. தன் தந்தையைக் காப்பாற்ற எண்ணி, தவத்தி லிருக்கும் தன் கணவர் ஜமதக்கினியிடம் அனுமதி பெறச் சென்றாள். செல்லும் வழியில் நாரதர் வேண்டுமென்றே அழகிய குழந்தையாகத் தோன்றினார். ரேணுகா அக் குழந்தையைக் கண்டு அகமகிழ்ந்து குலுங்கக் குலுங்கச் சிரித்தாள்.

தன் தவத்தைக் கெடுக்கும் செயலை ரேணுகா செய்கிறாள் என்று எண்ணிய ஜமதக்கினி அவளுக்குத் தண்டனை கொடுக்க முடிவு கொண்டார். மூத்த மகனை அழைத்து அவளைக் கொல்ல ஏவுகிறார். அவன் மறுக்கவே அவனுக்குச் சாபம் கொடுத்து இளைய மகன் பரசுராமனை அழைத்து அவளைக் கொன்றுவரும்படி கூறுகிறார். பரசுராமனும் அவள் தலையை வாளால் அரிந்து கொன்றுவிடுகிறான். வாள் அவன் கையையும் அறுத்துவிடுகிறது. இதனால் சினம்கொண்ட பரசுராமன் தந்தை மேல் குற்றம் சாட்டினான்; தன் கையும் தன் தாய் உயிரும் மீண்டும் வர வேண்டுகிறான். அவ்வாறே அவனுக்குக் கையும் அவளுக்கு உயிரும் வந்தன.

உயிர் பெற்ற 'ரேணுகா' கணவனிடம் அனுமதி பெறுகிறாள். தான் சக்தியின் வடிவம் என்பதையும் காட்டுகிறாள். அவள் அரக்கர்களுடன் போர் செய்கிறாள்; ஆயினும் அவர்கள் இறக்கவில்லை. சிந்திய இரத்தத்தி

லிருந்து மீண்டும் மீண்டும் உயிர்த்தெழலாயினர். இதனால் தன் தம்பி எதிராஜுலுவை உதவவேண்டினாள். அரக்கர்களின் இரத்தம் பூமியில் சிந்தாமல் அவனை தன் நீண்ட நாக்கால் குடிக்கச் சொன்னாள். அவனும் அவ்வாறு செய்ய அரக்கர்கள் இறந்தனர். ரேணுகாவின் தந்தையும் காப்பாற்றப்படுகிறான் இந்த எதிராஜுலுவையும், ரேணுகாவையும் கிராம மக்கள் தம் தெய்வங்களாக வணங்கி வருகின்றனர்.

பலியிடும் விலங்குகளையும் கிராம மக்கள் பலி இடுவதற்குமுன் தண்ணீர் தெளித்து மாலையிட்டு மஞ்சள், குங்குமம் தடவித் தொழுகின்றனர். அதன்பிறகு அவற்றைப் பலியிடுகின்றனர். பிறகு அவற்றின் இரத்தத்தைப் புனிதமாக நினைத்துச் சோற்றில் கலந்து பயிர்களின்மேல் தூவுகின்றனர். இறைச்சியை உணவாகக் கொள்ளும் உயிர்களையே மக்கள் பலியிடுதல் ஈண்டுக் குறிப்பிடத்தக்கது. எருமையின் இறைச்சியையும் மக்கள் உண்பதை நாம் கண்டுவருகிறோம். இதனால் அன்றிலிருந்து இன்றுவரை கிராம மக்கள் பலியிடும் விலங்குகளையும் இறைமைத்தன்மை உள்ளதாகக் கருதி அவற்றைத் தொழுதுவருதலை அறிகிறோம்.

செங்கல், கருங்கல், மண், உலோகம் முதலியவற்றால் செய்த உருவங்களுக்கும் இறைமை கொடுத்து அவற்றைத் தொழுதுவருதலைப் பண்டைய நாளிலிருந்து அறியலாம்.

சிலரின் கண்களுக்குக் கெட்ட ஆவிகளின் தன்மை இருப்பதாகக் கருதுகிறார்கள். அதனால்தான் 'கண்திருஷ்டி' பட்டுவிட்டதாகக் கூறுகிறார்கள். புதுத் துணியைக் கட்டினாலும், அழகான குழந்தையை வெளியே கொண்டுபோனாலும் திருஷ்டிப் படாமல்

இருக்க, மஞ்சள், குங்குமம் பூசல்; கருப்புப் பொட்டு இடுதல்; சுண்ணாம்பு கலந்த மஞ்சள் நீரால் திருஷ்டி வாங்குதல் போன்றவற்றைக் கிராமமக்கள் செய்து வருகின்றனர். இதுவும் ஒருவகையில் இறை வழிபாட்டையே சாரும்.

ஹென்றி வைட் எட் (Henry white Head) என்பவர் கிராம மக்களில் தெய்வவழிபாட்டுத் தோற்றத்திற்கான காரணங்களை ஆராய்ந்து 1. அச்சம், 2. நன்றி மறவாமை, 3. வியப்பு ஆகிய மூன்று நிலைகளில் ஏற்பட்டிருக்கலாம் என்று வகைப்படுத்திக் காட்டுவது மிகப் பொருத்தமாய் உள்ளது. இம் முக்காரணங்களையும் பின்வருமாறு விளக்குகிறார்.

1. அச்சம் :

இன்றைய அளவிற்கு அறிவின் வளர்ச்சிபெறாத அன்றைய மனிதன் வாழ்ந்த வாழ்வு அருமையுடைய ஒன்று. அவனைச் சூழ்ந்த அனைத்துச் சூழ்நிலைகளும் அவனுக்கு அச்சத்தை உண்டாக்குவனவாய் அமைய லாயின. பூகம்பங்கள், இடி முதலியனவும் தன்னினும் குறைந்த அறிவு உடைய வேறு பிறவிகள், அச்சம் தரும் சிங்கம், புலி, சிறுத்தை, யானை, பாம்பு முதலியன வும் இவனை அஞ்சி ஓடச்செய்தன; பதுங்கி வாழச் செய்தன. இந்நிலையில் இத்தகைய அச்ச நிலையிலிருந்து தன்னைக் காத்துக்கொள்ள ஒரு சக்தியை எதிர் பார்த்தான். அந்தச் சக்தியைத் தன்வயப்படுத்திக் கொண்டு அதனைத் தனக்குச் சாதகமாக அமைத்துக் கொள்ள எண்ணினான். இந்த எண்ணத்தின் செயல் நிலைகள்தான் பல தெய்வங்களுக்கு அவன் செய்யும் பூசைகளாகும்.

2. நன்றி மறவாமை :

இதற்கடுத்த நிலையில் தெய்வத் தோற்றத்தின் காரணமாக நன்றி மறவாமையும் இருக்கலாம். சமுதாய மாகக் கூடிவாழ்ந்த மனித இனம் ஒருவருக்கொருவர் பயன் கருதாமல் உதவிசெய்துகொண்டும் வாழ்ந்திருக்க வேண்டும். இந்நிலையில் உதவி பெற்ற ஒருவன் உதவி செய்தவனை மறவாமல் அவ்வப்போது நினைக்கத் தொடங்கினான். இதனால் நன்றி மறவாமைப் பண்பு அவனிடத்தில் வளரத்தொடங்கிற்று.

பூமி பொறுமையுடன் தன்னைச் சுமத்தலையும்; மரம், செடி, கொடிகள், காய், கனி, நிழல் கொடுத்து உதவுதலையும்; ஞாயிறு ஒளி தந்து பயன்படுதலையும்; சந்திரன் தண்மை கொடுத்துத் தனக்குத் தகுந்தவாறு உதவுதலையும் உயிர்கொண்டு வாழ எல்லா வகையிலும் பயன்பட்டுவரும் நீரையும் மனிதன் எண்ணி எண்ணி அவற்றின் பயன் கருதா உதவிகளை மறவாத நிலையில் நினைவில் வைத்துக்கொள்ளலாயினான். இதுவும் ஒரு வகையான வழிபாடாக அமைந்தது. இவற்றுக்கெல்லாம் காரணமான இயற்கையின் சக்தியையும் தொழலானான். அந்த இயற்கைச் சக்தியும், அந்த இயற்கைச் சக்தியின் மரபில் வந்தனவும் அன்றைய மனிதனுக்குத் தெய்வங்களாக அமைந்தன.

கூடிவாழ்ந்த மனித இனம் தம்மை வாழ்வாங்கு வாழ வழிதவறியபோதெல்லாம் வழிபடுத்திய சான்றோரையும் மறவாது நினைத்துத் தொழலாயிற்று. சான்றோர்கள் இகவாழ்வின்வழி பரமவாழ்விற்கு வழிகாட்டுபவர்களாய்த் திகழ்ந்தனர். எனவே அச் சான்றோரைத்

தொழுதலும் ஒருவகைச் சமயநெறிப் பூசையாக இடங் கொள்ளலாயிற்று.

வியப்பு :

ஒவ்வொரு செயலும் நல்லதாய் முடிய மனிதன் எண்ணுவது இயல்பு. அப்படி எண்ணும்போது அச் செயலுக்குச் சாதகமாகத் தன்னை மீறிய ஒரு சக்தியைத் துணையாக நாடிப் பொறுப்பை அதன்மேல் ஏற்றுகிறான். அப்பொழுது அச் செயல்தான் ஊகிக்கமுடியாத நிலையில் நல்லதாக முடிந்துவிட்டால் அவன் தன்னை அறியாமையில் இருத்திக்கொள்கிறான். இந் நிலை மீண்டும் மீண்டும் சக்தியைத் தொழுது சக்தியின் துணையால் செயல்கள் முற்றுப்பெறச் செய்கிறது. இதனால் அவனிடத்து அழியாத கடவுள் வழிபாடு அமையலாயிற்று. அச் சக்திக்குக் கொடுத்த உருவம் ஏதோ ஒரு பெயரில் தெய்வமாகத் திகழலாயிற்று.

கடவுள் வழிபாடு

கடவுள் வழிபாட்டை 1. வேதக் கடவுள் வழிபாடு, 2. வேதக் கடவுளரோடு தொடர்பில்லாத தெய்வங்களின் வழிபாடு என்ற இரு பகுப்பில் காணலாம். இவற்றுள் இரண்டாவது வகை நாட்டுப்புற மக்களிடத்து பெரிதும் இருத்தலைக் காணலாம்.

வேதக் கடவுளரோடு தொடர்பில்லாத தெய்வங் களின் வழிபாடு—1. வீட்டுத் தெய்வ வழிபாடு, 2. குல தெய்வ வழிபாடு, 3. ஊர்த் தெய்வ வழிபாடு என்ற நிலை களில் நாட்டுப்புற மக்களிடத்தே இருந்து வருகிறது; ஊர்த்தெய்வ வழிபாடு—சிறுதெய்வ வழிபாடு, பெருந்

தெய்வ வழிபாடு என்று இரு நிலைகளில் செயல் பெறுகிறது.

### வீட்டுத் தெய்வ வழிபாடு

ஒவ்வொரு வீட்டிற்கும் ஒரு குறிப்பிட்ட தெய்வம் உண்டு. அந்தத் தெய்வத்திற்கு குழந்தைப் பிறந்த சில நாட்களில் பொங்கலிட்டு பல சிறப்புக்கள் செய்து அக் குழந்தையின் முடி கொடுத்து அக் குழந்தையைக் காக்கும் பொறுப்பு அத் தெய்வத்திடம் ஒப்படைக்கப்படுகிறது. சிலர் அத் தெய்வத்தின் நினைவாக அத் தெய்வத்தின் பெயரையே தம் குழந்தைகளுக்குச் சூட்டுகின்றனர். முனீஸ்வரன், முனியம்மா, துர்கம்மா, சென்சம்மா, சிட்டம்மா, தர்மையா முதலிய பெயர்கள் இவ்வாறு வந்தவையே. இங்ஙனம் வழிபடுவது வீட்டுத் தெய்வ வழிபாடாகும்.

### குலத்தெய்வ வழிபாடு

ஒரே ஊரில் வேறுவேறு இனத்தவர் இருப்பர். ஒவ்வொரு இனத்தவரும் தமக்கென ஒரு தெய்வத்தை வருபடுவதுண்டு. இதுவே குலத்தெய்வ வழிபாடாகும். சான்றாக 'காட்டேறி' என்ற தெய்வத்தை ஓர் இனத்தார் வணங்குகின்றனர். அதே ஊரில் வாழும் இன்னொரு இனத்தவர் அத் தெய்வத்தை வணங்கமாட்டார்கள். இவர்கள் அத் தெய்வம் தம் தெய்வமன்று என்றும் அத் தெய்வத்தால் தமக்குப் பாதகம் ஏற்படுவதாகவும் நம்புகின்றனர். இதனால்தான் இவர்கள் காட்டேறி தெய்வத்தை வணங்கும் நாளில் வணங்குவோர் வீட்டிற்குச் செல்லமாட்டார்கள். அத் தெய்வத்திற்குப் படைத்த யாதொன்றையும் உண்ணமாட்டார்கள்.

**ஊர்த்தெய்வ வழிபாடு :**

ஒவ்வொரு ஊரும் தமக்கென்று சில தெய்வங்களைக் கொண்டிருக்கும். இத் தெய்வங்கள் பெருந்தெய்வங்களாக வும் சிறுதெய்வங்களாகவும் திகழ்கின்றன. ஊர்த் தெய்வமே சில கிராமத்தாருக்குக் குலத்தெய்வமாகவும் அமைதல் உண்டு. பெருந்தெய்வங்களில் பெரும்பாலும் சிவனும் திருமாலும் வேறு வேறு உருவ நிலையில் ஊர்த் தெய்வங்களாக நிலவிவருகின்றனர்.

இவ்வாறு அமைந்த வீட்டுத்தெய்வ, குலத்தெய்வ, ஊர்த்தெய்வ வழிபாடுகளில் இடம்பெறும். நாட்டுப்புறத் தெய்வங்களை பெண்தெய்வங்கள் என்றும், ஆண்தெய்வங் கள் என்றும் இருவகையாகப் பகுக்கலாம்.

ஈண்டு 'ராயலசீமா' பகுதியிலும், சித்தூர் மாவட்டத் திற்கு அருகில் உள்ள தமிழ்நாட்டைச் சார்ந்த ஊர் களிலும் தொழப்படும் நாட்டுப்புறத் தெய்வங்களைப் பற்றி மேற்சொன்ன ஆண்தெய்வங்கள் பெண்தெய்வங் கள் என்ற இரு பகுப்புகளில் கூறப்பெறுகின்றன.

**பெண் தெய்வங்கள் :**

அங்கம்மா, அக்கம்மா, அக்ககாருலு, அல்லிமல்லம்மா, அனந்தபூரம்மா. அவனாட்சம்மா, ஆரேடம்மா, ஆதிசக்தி, அவடம்மா, இருகாலம்மா, ஈதம்மா, எல்லம்மா. கனகதுர்காம்பா, கன்னிகா பரமேஸ்வரி, கனிகலம்மா, கட்டபுட்டாலம்மா, கானகல்லம்மா கர்மாட்சம்மா, குப்பம்மா, குண்டாலம்மா, சல்லாலம்மா, செந்தாலம்மா, சீராலம்மா, செளடேஸ்வரி, தாரம்மா, தும்மாலம்மா, மாரியம்மா, பெத்தம்மா. பெத்த நாஞ்சாரம்மா, பெத்த போலேரம்மா, பங்காரம்மா,

பண்டிம்ம, மல்லம்ம, மாதம்ம, முத்தியாலம்ம, மூலஸ்த்தானம்ம, மொகிலம்ம, ரெட்டம்ம, ரேணுகம்ம, வசகோடி எல்லம்ம, வாகூரம்ம, சங்குலம்ம—முதலிய பெண் தெய்வங்களை இப் பகுதியோர் தொழுது வருகின்றனர். இவர்களோடு பேரண்டாலு என்று சொல்லப்படும், காகம்ம, சின்னம்ம, லெங்கம்ம, சன்னியாசம்ம, லட்சுமம்ம—ஆகிய பெண்தெய்வங்களை யும் கிராமமக்கள் வணங்குகின்றனர்.

**ஆண் தெய்வங்கள்:**

இந்தப் பகுதியில் பெண் தெய்வங்களோடு ஆண் தெய்வங்களுக்கும் பூசைகள் நடைப்பெற்றுவருகின்றன. ஆண் தெய்வங்களில் போதுராஜு, முனிஸ்வரன், கருப்புசுவாமி, தர்மராஜு, காடமராஜு, காட்ரேடு, வீரன்ன, பைரவசுவாமி, அநுமான், திம்மராயசாமி—முதலியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

**கங்கம்மா (கங்கையம்மன்)**

பெண் தெய்வங்களில் கங்கம்மா தெய்வத்தை கிராம மக்கள் சிறப்பாகத் தொழுகின்றனர். கங்கையம்மன் திருவிழா வருடத்திற்கு ஒருமுறை மிகவும் ஆடம்பரமாகச் கொண்டாடப்படுகிறது. இவ் விழாவை ஆந்திரபிரதேசத் தைச் சார்ந்த சித்தூர் மாவட்டத்தில் மிகவும் சிறப்பாகக் கொண்டாடப்படுவதைக் காணலாம். இங்கு எல்லா கிராமங்களிலும் இவ் விழா கொண்டாடப்படுகிறது. மற்றும் கர்நாடகத்தில் கோலார் பகுதியிலும் தமிழ் நாட்டில் கிராமப் பகுதிகளிலும் இவ் விழா கொண்டாடப் படுகிறது. இவ் விழாவை ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு வகையாகக் கொண்டாடினாலும் கொண்டாடும் முறையில் பல ஒற்றுமைகள் உள்ளன.

இந்த கங்கையம்மா ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு பெயரில் அழைக்கப்படுகிறாள். சித்தூர் மாவட்டத்துத் திருப்பதியில் இக் கங்கையம்மா தாள்ளபாக்க கங்கையம்மா என்றும் பெத்தகங்கம்மா, சின்னகங்கம்மா, சந்திரகிரிகங்கம்மா, மிட்டகங்கம்மா என்றும் அம்போதரம் பள்ளியில் மரானா கங்கம்மா என்றும் முக்கடூரில் முக்கமாரிகங்கம்ம என்றும் மாமுண்டூர் கிராமத்தில் தொட்டிகங்கம்மா என்றும் அழைக்கப்படுகிறாள். இவ்வாறு ஒவ்வொரு ஊரிலும் கங்கம்மா கிராம மக்களால் ஒவ்வொரு பெயரில் அழைக்கப்பட்டுத் தொழப்படுகிறாள்.

**கங்கம்மா பற்றிய கதைகள்**

கங்கம்மா பிறப்புத் தொடர்பாய் சித்தூர் மாவட்டப் பகுதிகளில் பல கதைகள் நிலவிவருகின்றன. அவற்றுள் ஒருசில மட்டும் இங்குக் குறிக்கப்படுகின்றன.

**முதலாம் கதை**

இவ்வுலகத் தோற்றத்திற்கு முன்பு இவ் வுலகம் உருண்டை வடிவத்தில் சுற்றிக்கொண்டிருந்தது. அப்பொழுது உருண்டை வடிவான இவ்வுலகத்தில் 'ஓம்கார்' (நாதம்) ஓசை ஒரு பெண் வடிவத்தில் வெளியாயிற்று. அவ் வடிவம் மூன்று கண்களையும், சடைகளையும் நான்கு கைகளையும்கொண்டு கையில் சூலத்துடன் மிகவும் பயங்கரமாகத் தோற்றத்தைக் கொண்டிருந்தது. அந்த உருவம் இவ்வுலகம் செயல்படுவதற்கென்று பிரம்மா, விஷ்ணு, சிவன் என்னும் மூன்று சக்திகளைப் படைத்தது. படைத்த அம் முச்சக்திகள் ஆண் வடிவம்கொண்டு தோற்றத்தில் அழகாய் இருந்தன. அவற்றின்மீது அப் பெண்சக்தி காமம் கொள்ளலாயிற்று. பிரம்மாவும் விஷ்ணுவும் அச் சக்தியைத் தாய்

நிலையில்வைத்து அம்மா என்று அழைக்கலாயினர். சிவன் மட்டும் அச் சக்தியிடமிருந்து மூன்றாம் கண்ணாகிய நெற்றிக்கண்ணையும் வாங்கிக்கொண்டான். அவள் ஓம்கார நாதசக்தியாகையால் அந்தச் சக்தியின் காமத்தைத் தீர்ப்பதற்குத் தனக்குத் தகுதி இல்லை என்றும் இந்த உலக மக்கள் மூலமாக அவள் இச்சையைத் தீர்த்துக்கொள்ளலாம் என்றும் சிவன் உபாயத்தை அறிவிக்கின்றான்.

அச் சக்தியும் அவ்வாறே தன் இச்சையைத் தீர்த்துக் கொள்ளும் வகையில் கிராம மக்களின் பிள்ளைகளுக்குப் பல துன்பங்களைக் கொடுக்கலாயிற்று. துன்பங்களால் வாடிய கிராம மக்கள் சிவனை வேண்டினர். சிவன் ஓங்கார நாதமாகியப் பெண் சக்தியை வணங்கி தம் துன்பங்களை நீக்கிக்கொள்ள வழி கூறினார். அவன் கட்டளைப்படி கிராம மக்கள் அந்தச் சக்தியின் உருவத்தை ஏற்படுத்தி பூசைகள் செய்து உயிர்ப் பலியை யும் கொடுக்கலாயினர். அச் சக்தியையே கிராம மக்கள் கங்கம்மா என்று வணங்குகின்றனர்.

இச் செய்தி மூத்தோர் பலரால் திருப்பதியில் கூறப்பட்டு வருகிறது.

## இரண்டாவது கதை

இது சைவமதச் சார்புடைய கதை. ஆந்திர நாட்டில் உள்ள ஏலூரில் ஜாலரி குலத்தில் 'சங்கு தேவய்யா' என்பவர் வாழ்ந்துவந்தார்; அவர் மனைவி 'சக்கரம்மா' என்பவர். செல்வந்தராயினும் அவர்களுக்குக் குழந்தைப் பேறு இல்லை.

ஒருநாள் ஜங்கம குலத்தைச் சேர்ந்த ஒருவர் பிச்சைக்காக வந்தார்; குழந்தை இல்லாத வீட்டில் பிச்சை பெற விருப்பமின்றி அவர் திரும்பிவிட்டார்; அதனால் சக்கரம்மா மிகவும் வருந்தினார். பணமிருந்தும் என்ன பயன் என்று வேதனைகொண்டார். குழந்தைக்காகத் தம்பதிகள் இருவரும் சிவனை நோக்கிக் கடுந்தவம் செய்தனர். சிவபெருமான் அவர்களின் தவத்திற்கு மெச்சி கங்கம்மா அவர்களுக்குக் குழந்தையாகப் பிறப்பதாக வரமளித்தான். அவ்வாறே அவர்களுக்குக் குழந்தை பிறக்க அதற்குக் கங்கம்மா என்று பெயரிட்டனர் குழந்தையும் செல்வாக்குடன் வளர்ந்து திருமணப் பருவமடைந்தது. நாரதர் அவள் அழகினைச் சிவபெருமானுக்குக் கூற, சிவபெருமான் அவளைத் திருமணம் புரிந்துகொள்கிறான். இக் கங்கம்மாவே இன்று கிராம மக்களால் தொழுதுவரும் கங்கம்மா என்ற ஒரு செய்தி உண்டு.

## மூன்றாவது கதை

இவ்வுலக மக்களின் வேண்டுகோளுக்கிணங்க சிவபெருமான் கங்காதேவியை அனுக்ரகித்தான். அவள் திருப்பதியில் உள்ள கபிலதீர்த்தத்தில் சிறு குழந்தையாய் சிவன் அருளால் மிதந்துக் கொண்டிருந்தாள். அக் குழந்தையை ஒரு பிராமணன் எடுத்துச்சென்று வளர்த்து வந்தான். குழந்தையாகிய காளிகாதேவி, கோபங் கொண்டு அம்மை வார்த்தலாகிய பயங்கர நோய்களை மக்களுக்குக் கொடுத்தாள். அவளுடைய கோபத்தைத் தணித்துச் சாந்தப்படுத்துவதற்காக திருப்பதி மக்கள் அவள் உருவத்தை ஏற்படுத்தி ஒவ்வொரு வருடமும் அவளுக்குத் திருவிழா செய்கிறார்கள். இதனால்

மக்களுக்கு எந்தத் தீங்கும் வராது என்பது அவர்களின் நம்பிக்கை.

**நான்காவது கதை**

சூத்திரன் ஒருவன் தன்னை பிராமணன் என்று சொல்லிக்கொண்டு ஒரு பிராமணப் பெண்ணை மணந்து கொள்கிறான். ஒருநாள் மனைவி தின்பண்டமான போளி களைச் செய்து அவனுக்கு அளித்தாள். அவற்றைக் கண்ட அவன் சூத்திரன் என்பதாலும் மேலும் எருமை களுடன் தொடர்புடையவன் என்பதாலும் அவற்றை எருமைகளின் நாக்கிற்கு ஒப்பிடுகிறான். இதைக்கேட்ட பிராமணப் பெண்ணான அவள் அவன் சூத்திரன் என்பதை அறிந்து, அவனை எருமையாகும்படி சபிக்கிறாள். அவ்வாறே அவன் எருமையாக மாறி அவளைத் துரத்திக்கொண்டுவர, அவள் ஒரு புற்றில் மறைந்துகொண்டாள். எருமை புற்றை தன் காலாலும் கொம்பாலும் சிதைத்தது. அப்பொழுது புற்றிலிருந்து ஆவேசமாக எழுந்த அந்தப் பிராமணப் பெண் எருமையை வெட்டி அதன் இரத்தத்தைத் தன் நெற்றி யில் இட்டுக்கொண்டாள். அவளே கங்கையம்மாள். அந்த அம்மைக்கு ஒவ்வொரு வருடமும் வைகாசி மாதத்தில் ஒரு செவ்வாய்க் கிழமையன்று திருவிழா நடத்துவர். அப்பொழுது அந்த அம்மையைச் சாந்தப்படுத்த எருமை யைப் பலியிடுவர்.

**ஐந்தாவது கதை**

புங்கனூர் பகுதியில் கங்கம்மா பற்றி ஒரு கதை வழக்கத்தில் உள்ளது. ஒரு பிராமணனிடம் இழிந்த சாதி இனத்தைச் சார்ந்த ஒருவன் தான் பிராமணன் என்று

பொய் சொல்லி கல்வி கற்று வந்தான். அவனின் நல்ல குணங்களைக் கண்ட பிராமணன் தன் மகள் கங்கை யம்மாளை அவனுக்குத் திருமணம் செய்தான்.

சில நாட்களுக்குப் பிறகு அவன் இழிந்த சாதியினன் (பறையன்) என்பது தெரிகிறது. பிராமணன் தன் மகளைத் தீக்கிரையாக்குகிறான். சுட்ட உடலோடு அந்தக் கங்கையம்மா ஒரு வேப்ப மரத்தில் ஏறி உட்கார்ந்துக் கொண்டு கணவனுக்காகக் காத்திருக்கிறாள். அதை அறியாத அவள் கணவன் அந்த வேப்பமரத்தை வெட்டி வீழ்த்தினான். அதனால் கோபங்கொண்ட கங்கையம்மா கணவனை எருமையாகவும் அவன் அம்மாவை ஆடாகவும் ஆகும்படி சபித்து, தனக்குப் பூசைகள் செய்யும்படி ஆணையிடுகிறாள். அன்றிலிருந்து அவ்வூர் மக்கள் வருடம் ஒரு செவ்வாய்க் கிழமையோ வெள்ளிக் கிழமையோ பலியிட்டு திருவிழா கொண்டாடுகின்றனர். அப்பொழுது எருமையையும் ஆடுகளையும் பலியிடுவர்.

ஆதி சக்தியாகிய கங்கம்மா திருப்பதிக்கு அருகில் உள்ள அவிலால கிராமத்தில் பிறந்ததாக இன்றும் மக்கள் நம்பி வருகின்றனர். ஏதோ சில காரணங்களால் ஆதிசக்தி திருப்பதியைத் தன் இருப்பிடமாகக்கொண்டதாக கூறுகின்றனர். இன்றும் அவிலால கிராமத்திலிருந்து திருப்பதி கங்கம்மாவுக்கு ஒவ்வொரு வருடமும் திருவிழா வின்போது மஞ்சள் குங்குமத்தை அனுப்புகின்றனர்.

வைணவ ஆசாரியரரகிய அன்னமாச்சாரியார் தன் சொந்த ஊரான கடப்பை மாவட்டத்திலிருந்து கங்கம்மாவை கொண்டுவந்து திருப்பதியில் நிலவிய தாகவும் செய்தி இன்றும் இருந்துவருகிறது.

இச் செய்தியை உறுதிப்படுத்தும் வகையில் மேலும் ஒரு செய்தி அவிலால கிராமத்தில் பேசப்பட்டு வருகிறது. அது வருமாறு :

திருப்பதியில் 'தாதாசாரி' என்ற பிராமணர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் ஒருமுறை கடப்பையிலிருந்து திருப்பதிக்கு வரும்பொழுது தம் களைப்பைத் தீர்த்துக் கொள்ள 'தாள்ளபாக்கம், (கடப்பை ஜில்லாவில் உள்ளது) கிராமத்தில் இரவில் தங்கினார். அப்பொழுது அவ்வூர் மக்கள் அவர் பிராமணர் என்று தெரிந்துகொண்டு உணவுக்கு வேண்டிய பொருட்களைக் கொடுத்தார்கள். அவரும் சமையல் செய்து உண்டுவிட்டு அந்த ஊர் ரச்சைமேல் (ரச்ச என்பது ஊர்ப் பொதுவிடத்தில் உட்காருவதற்கு ஏற்படுத்திக்கொண்ட இடம்) படுத்துக் கொள்ளும்போது அங்கே ஒரு சக்தி இருப்பதாகவும் அதனால் தீங்கு ஏற்படுமென்றும் சொல்லித் தடுத்தார் கள். தாதாசாரி மந்திரம் அறிந்தவர். ஆகையால்— அதனால் தனக்கு ஒரு பயமும் இல்லை என்றுசொல்லி . ரச்சையைச் சுற்றிலும் மந்திரித்த அரிசியைத் தெளித்து நடுவில் விழிப்போடு படுத்திருந்தார். இரவில் சக்தி அவரை விழுங்குவதற்காக வந்து அவரின் மந்திர பலத் தால் அணுகமுடியாமல் நின்றுவிட்டது விழிப்போடு இருந்த தாதாசாரி இதைத் தெரிந்துகொண்டு அச் சக்தியைக் குழந்தையாகச் செய்து தன் பக்கத்தில் படுக்க வைத்துக்கொண்டார்.

காலையில் அந்த ஊர் மக்களுக்கு அக் குழந்தையே சக்தி என்றும் அதைத் தான் குழந்தையாக்கியதையும் கூறினார். அவர்கள் அக் குழந்தையைச் சக்தி உருவத்தில் பார்க்கவேண்டும் என்று வேண்ட அதற்கிணங்க அவர் அவளின் பயங்கர உருவத்தைக் காட்டச் செய்தார்,

தாதாசாரியை, அவ்வுருவத்தைக் கண்டு பயந்த மக்கள், அச் சக்தியைத் தம் ஊரிலிருந்து கொண்டு போகும்படி கேட்டுக்கொண்டனர். மீண்டும் அந்தச் சக்தியைக் குழந்தை உருவமாக்கிவிட்டார். அச் சக்தியைத் தாதா சாரியார் தம் ஊராகிய திருப்பதிக்குக் கொண்டுவந்து வளர்த்தார். திருமணப் பருவத்திற்கு வந்ததும் அவளைத் திருப்பதிக்கு அருகில் உள்ள அவிலால கிராமத்தில் - ஒரு போலேக்காரனுக்குக் கொடுத்துத் திருமணம் செய்தார். சோபனஅறையில் அவளின் உண்மை உருவத்தைக் கண்ட போலேக்காரன் பயந்து ஓடிவிட்டான். ஓடிவிட்ட அவனைச் சக்தி நாளுக்கொரு வேடம் தரித்துக்கொண்டு ஒரு வாரமாகத் தேடினாள். இறுதியாகத் திருப்பதியில் சுண்ணாம்புக் குடங்கள் உருவத்தில் அவனைக் கண்டு தன் கோபம் தீர அவன் தலையைத் துண்டித்தாள்.

இதை அறிந்த தாதாசாரியாரும் அவ்வூர் மக்களும் அவளைத் திருப்பதியில் இன்று 'தாதாய்யகுண்டா' என்று வழங்கப்படும் இடத்தில் நிலவச்செய்து ஒவ்வொரு வருடமும் அவளின் சாந்திக்காகத் திருவிழா நடத்த ஏற்பாடு செய்தார்கள்.

அச் சக்தியே இன்று கங்கம்மா என்ற பெயரில் திகழ்ந்துவருபவள். அவள் போலேக்காரனுக்காக ஏழு நாட்கள் வேறு வேறு வேடம் கொண்டதன் விளைவாக இன்றும் திருப்பதியில் கங்கம்மா திருவிழா ஏழு நாட்கள் ஒவ்வொரு நாளும் ஒவ்வோரு வகையான வேடங்கள் தரிக்க நடந்துவருகிறது. இச் சக்தியைத் தாள்ளபாக்கத் திலிருந்து கொண்டுவந்த காரணத்தால் 'தாள்ளபாக்க கங்கம்மா' என்று மக்களால் அழைக்கப்படுகிறாள்.

இவ்வாறு கங்கம்மா தோற்றம் பற்றி பல்வேறு கருத்துக்கள் இருந்துவருகின்றன.

## கங்கம்மா விழா பற்றிய செய்திகள்

நாட்டுப்புற மக்கள் ஏதாவது ஒரு தெய்வத்திற்கோ சக்திக்கோ பக்தியுடன் பூசைகள் செய்து அந்தத் தெய்வத்தின் அல்லது சக்தியின் அன்புக்கு ஆளாகிறார்கள். இவர்கள் பெண் தெய்வங்களில்—கங்கம்மாவை முக்கியமான தெய்வமாகக் கொண்டு கொண்டாடிவருகின்றனர்.

இச் சக்திமிக்க தெய்வத்தைக் கிராம மக்கள் பெரும்பாலும் ஊர் மத்தியில் குறிப்பிட்ட நாளில் நிலவ வைத்தும், ஊர் வெளியில் வைத்தும் துதித்து வருகின்றனர். இவ் விழாவை அவர்கள் மிகவும் சிறப்பாகக் கொண்டாடுவது குறிப்பிடத்தக்கது.

பொதுவாக சித்தூர் மாவட்டம் முழுவதும் நடக்கும் இவ் விழாவில் சாட்டுப்போடுதல், கங்கம்மா உருவை உருவாக்குதல் அலங்காரம் செய்தல், பிரார்த்தனைகள் செலுத்துதல், பொங்கல் இடல், பலி இடல், பலவித வேடங்கள் தரித்தல், கங்கம்மாவை ஊர்சுற்ற வைத்தல், முதலிய செயல்கள் ஒரே வகையாக நடந்துவருகின்றன.

திருப்பதி கங்கம்மா திருவிழா மட்டும் இந் நிகழ்ச்சிகளோடு வேறுசில சிறப்பான நிகழ்ச்சிகளைக் கொண்டு நடைபெற்றுவருகிறது.

சித்தூர் மாவட்டத்திற்கு அருகில் உள்ள வட ஆற்காடு மாவட்டம், செங்கல்பட்டு. மாவட்டம், சென்னையைச் சேர்ந்த பகுதிகள் முதலிய தமிழ்நாட்டுப் பகுதிகளில் கரகாட்டம் பொய்க்கால் குதிரை ஆட்டம்

முதலிய வேடிக்கைகளையும் கங்கம்மா விழாவில் சேர்த்துக் கொண்டாடுகின்றனர்.

சித்தூர் மாவட்டப் பகுதிகளில் திருவிழாவின்போது கங்கம்மாவை மண்ணால் செய்து வணங்குகின்றனர். தமிழ்நாட்டுப் பகுதிகளில் மரத்தால் அல்லது உலோகத்தால் முன்பே செய்துவைத்த கங்கம்மாவை அலங்கரித்து வணங்குவதும் பண்பாடாக இருந்து வருகிறது.

### கங்கம்மா விழா நடைபெறும் முறை

கங்கம்மா திருவிழா பெரிய நகரங்களில் ஒரு வார காலம் நடைபெறும். கிராமங்களில் இரண்டு நாட்கள் நடைபெறும். விழா நடப்பதற்கு ஒரு வாரம் முன்பே சாட்டு நடைபெறும். எல்லா இடங்களிலும் செவ்வாய்க் கிழமை இரவில் சாட்டுவார்கள். சாட்டுவித்த அடுத்த வாரம் செவ்வாய், புதன் இரு நாட்களில் விழா நடைபெறும். திருப்பதி சித்தூர் நகரங்களில் சாட்டுவித்த நாளிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வகையான வேடம் போட்டுத் தம் பிரார்த்தனைகளை மக்கள் செலுத்துவர்.

### கங்கம்மாவை உருவாக்கல் (தீர்த்தல்)

மண்ணால் கங்கம்மாவை செவ்வாய்க்கிழமையன்று உருவாக்குவர். அதைச் சம்பிரதாய முறைகளின்படி கொலுவீற்றுவர். சில இடங்களில் உலோகத்தாலோ மரத்தாலோ ஆன கங்கம்மாவின் தலைமட்டும் இருக்கும். அதைச் செவ்வாய்க்கிழமை இரவில் சோடிப்பார்கள். கங்கம்மாவிற்குப் பட்டுச் சேலையையும் இரவிக்கையையும் அணிந்து ஆபரணங்கள் இட்டு அழகுப்படுத்துவர்.

தமிழ் நாட்டுப் பகுதிகளிலும் இந்தப் பழக்கமே காணப்படுகிறது.

தமிழ்நாட்டில் உள்ள ஒவ்வொருக் கிராமங்களிலும் கங்கம்மாவிற்கென்று தனிப்பட்டக் கோவில் இருக்கும். பெரும்பாலும் கோவில் ஊருக்கு வெளியில் அமைந் திருக்கும். கோவிலில் கங்கம்மாவின் சிலை இருக்கும். ஊர்வலத்திற்காக வேறு கங்கம்மாவை செய்வதற்கு என்று உலோகத்தால் ஆன கங்கம்மாவின் தலை, கை கால்களைத் தனித்தனியாக வைத்திருப்பார்கள். அந்த உறுப்புக்களை மரக்கட்டையினால் செய்து வைக்கப் பட்டுள்ள கங்கம்மாவின் உருவத்திற்கு ஜோடிப்பார் கள். அந்தக் கங்கம்மாவைத் தூக்கிச் செல்வதற்கு வசதி யாய் நீளமான, கனமான இரண்டு மரத் தூலங்கள் அமர்த்தப்பட்டிருக்கும். ஆசனத்தில் கங்கம்மாவை அமர்த்துவர். இச் செயல்கள் அனைத்தும் செவ்வாய் இரவிலேயே நடைபெறும். இவ்வாறு அலங்கரிக்கப் பட்ட கங்கம்மாவை ஊரில் உள்ள ஒவ்வொரு வீட்டின் முன்பும் நிறுத்துவர். அந்த வீட்டார் கங்கம்மாவின் கீழே நீர் ஊற்றி, தட்டில் தேங்காய் கற்பூரம் வைத்துப் பூசாரியிடம் கொடுப்பர். அந்த ஊர் வண்ணான் பூசாரியாக இருப்பான். அந்த பூசாரி கற்பூரம் கொளுத்தி தேங்காயை உடைத்துத் தருவான். அவ் வீட்டார் பின்னர் அம்மாவை மூன்றுமுறை வலம்வந்து தொழுதுவிட்டுச் செல்வர். சின்னக் குழந்தைகளை அவளின் அருள் பெறுவதற்காக அவள் மடியில் படுக்க வைத்துப் பிறகு எடுத்துக்கொள்வர்.

சிலர் கங்கம்மாவுக்குக் கடா வெட்டுவதாகவோ கடலைப் பருப்புப்பொடி, சுண்டல், வெள்ளநீர் முதலிய வற்றைப் படைப்பதாகவோ வேண்டிக்கொண்டிருப்பார்.

அத்தகையோர் தம் வீட்டின்முன் கங்கம்மா வந்தபோது தம் வேண்டுதல்களை நிறைவேற்றுவர். கடா வெட்ட கடமைப்பட்டோர் அம்மன் ஊர்வலம் வருவதற்கு முன்பே கடாவை (வெள்ளாடு அல்லது செம்மறியாடு) குளிப்பாட்டித் தூய்மையாய் வைத்திருப் பார்கள். கங்கம்மா வந்ததும் அந்தக் கடாவை கங்கம்மாவின் முன்பு நிற்கவைத்து அதன்மீது தண்ணீரை ஊற்றுவர். தண்ணீர் பட்டதும் அது தன் உடம்பை ஜாடிக்கும். ஜாடித்தலைக் கங்கம்மா கடாவை வெட்ட ஏற்றுக்கொண்டதற்கான சின்னக் குறியாகக் கொண்டு அந்தக் கடாவிற்கு மஞ்சள் குங்குமம் தடவிப் பூச்சூடி வெட்டுவர். வெட்டுதல் வேலையை வண்ணான் செய்வான்; அவன் அம்மன் கூடவே கத்தியோடு வருவான். வண்ணார்களில் வேறு சிலர் தீவட்டியைப் பிடிப்பார்கள். கடாவை வெட்டி யதும் தலையிழந்த உடலைக் கங்கம்மாவைச் சுற்றிலும் மூன்று முறை இழுத்து வீட்டிற்குக் கொண்டுசெல்வர். பிறகு சமைத்து உண்பர். இவ்வழக்கம் இன்றும் இருந்துவருகிறது.

பருப்புப்பொடி, சுண்டல், வெல்லநீர் படைத்த வர்கள் அவற்றை முதலில் கங்கம்மாவைத் தூக்கிச் செல்வோருக்குக் கொடுத்து பிறகு அங்கிருக்கும் மற்ற வர்க்குக் கொடுப்பர். பிள்ளைகள் இவற்றுக்காகவே கங்கம்மாவின் ஊர்வலத்துடன் வருவர்.

கங்கம்மாவை தூக்கிச் செல்ல வீட்டிற்கு ஓர் ஆள் செல்வர். கங்கம்மாவைத் தூக்கினால் என்றும் நலமே நடக்கும் என்பது அவர்கள் நம்பிக்கை. இன்றும் இவ் வழக்கம் உள்ளது. ஊர்வலம் முடிந்ததும் கங்கம்மாவைத்

கோவிலுக்குக் கொண்டுசென்று மரக்கட்டைகளை எடுத்துவிட்டு வாகனத்துடன் கோவிலுக்குள் வைப்பர்.

அன்று பிற்பகல் 3 மணியளவில் கங்கம்மா தோப்பில் விழா நடைபெறும். எல்லாவிதமான கடைகளும் அங்கு இருக்கும். பலவகை வேடங்கள் தரித்தவர்கள் கங்கம்மாவைத் தொழுவர். வாத்திய இசைக்கு ஏற்றவாறு ஆடுவர். ஊர்மக்கள் சுற்றுப்புற மக்கள், விருந்தினர் ஆகியோர் கோவிலுக்கு வந்து, தேங்காய் உடைத்துத் தம் குறைகளைத் தீர்க்கும்படி வேண்டுவர் வேண்டுதல்களையும் செய்துக்கொள்வர்.

குழந்தைகள் திருவிழாவில் புத்தாடைகளை அணிவர். மகிழ்ச்சியோடு கோவிலுக்கு வந்து தமக்குக் கொடுத்த திருவிழா காசால் தின்பண்டங்களையும் பொம்மைகளையும் வாங்கிக்கொள்வர்.

பச்சைவண்டி பிரார்த்தனையையும் செய்வதுண்டு பச்சை வண்டி பிரார்த்தனை என்பது இவ்வாறு நடைபெறும். வண்டிக்கு பச்சைக் கீற்றுகளால் கூடுகட்டு வார்கள். வண்டியை நன்றாக அலங்காரம் செய்வர்; எருதுகளையும் அலங்கரிப்பர்; வண்டிக்கும் எருது; களுக்கும் மஞ்சள் குங்குமம் இடுவர். வண்டியில் கங்கம்மாவிற்குப் படைத்த பிரசாதங்கள், சுண்டல் முதலியவற்றை வைப்பார்கள். வண்டியைத் தோப்பிற்கு ஓட்டிவந்து கோவிலை மூன்றுமுறை சுற்றுவார்கள். பின்னர் வண்டியில் உள்ளவற்றை அங்குள்ளவர்க்குக் கொடுத்துவிட்டு வீட்டிற்குச் செல்வர். இதையே பச்சை வண்டி பிரார்த்தனை என்பர்.

மாலை நேரத்தில் வெடிமருந்து வேடிக்கைகள் இருக்கும்.

மறுநாள் வாகன அலங்காரத்தைக் கழற்றிவிடு வார்கள். கங்கம்மாவின் உறுப்புகளையும் பத்திரப்படுத்தி விடுவர். கோவிலில் நிலையாய் கங்கம்மா சிலை இருக்கும் அதை ஒவ்வொருவரும் செவ்வாய், வெள்ளி கிழமைகளில் மக்கள் வணங்குவர்.

இவ்வாறாக ஒவ்வொரு வருடமும் கங்கம்மா திருவிழா நடைபெறும்.

ஆந்திராவில் உள்ள கிராமங்களில் திருவிழா நடைபெறுவதற்கும் நகரங்களில் நடைபெறுவதற்கும் வேறுபாடுகள் உண்டு.

திருப்பதியைச் சுற்றியுள்ள கிராமங்களில் பெரும் பாலும் திருப்பதி கங்கம்மா விழாவன்று (செவ்வாய்க் கிழமை) கங்கம்மா விழா கொண்டாடுவதற்கு காப்புக் கட்டுவார்கள். அன்று தொடங்கி கங்கம்மா விழாவிற் குரிய ஏற்பாடுகள் நடைபெறும். விழாவின் செலவிற் காக மக்களிடம் வீட்டிற்கு இவ்வளவு என்று ஒரு குறிப்பிட்டத் தொகையை வசூல் செய்வர்.

காப்புக் கட்டிய மறுவாரம் கங்கம்மா ஊருக்கு நடுவே நிறுத்துவதற்குச் சிறிய குடிசையைப் போடுவார்கள். குடிசை சுற்றிலும் பந்தல் இடுவார்கள். திங்கள் இரவு மண்ணால் கங்கம்மா உருவத்தைச் செய்து குடிசையில் நிறுத்துவர். நிறுத்தும்பொழுது எருமையைப் பலியாகத் தருவர். வெட்டிய எருமையின் தலையை அம்மாவின் முன் வைத்து அதன்மேல் விளக்கேற்றுவார்கள். எருமை யின் இரத்தத்தில் சோற்றைக் கலந்து அதை ஊர்ச் சுற்றிலும், பயிர்கள் மீது இறைப்பர். வெட்டுண்ட எருமையை அவ்வூர்ப் பறையர்கள் கொண்டு சென்று உண்பர்.

பிரார்த்தனைகள் உள்ளோர் ஆடு, கோழி, ஆகியவற்றை கங்கம்மாவிடம் கொண்டு சென்று பலியிடுவர். பின்னர் அவற்றை கங்கம்மா சுற்றிலும் மூன்று முறை சுற்றி வீட்டிற்குக் கொண்டுசெல்வர்.

இந்தக் கங்கம்மா புதன்வரை இருக்கும். அன்று நடுப் பகலில் பொழுதில் அம்மாவைக் கிணற்றில் போட்டு விடுவர்.

இங்கு தமிழ்நாட்டு கிராம மக்கள் போன்று கங்கம்மாவை ஊர்வலம் செய்வதில்லை. வேடங்கள் போடுவதும் இல்லை.

திருப்பதியில் சிறிய கங்கம்மா வேசாலம்ம ஆகிய இருவருக்கும் உலோகத்தால் ஆன சிலைகள் உள்ளன. பெரிய கங்கம்மாவிற்கு மட்டும் கற்சிலை உள்ளது. இம் மூவர்க்கும் நிலையான கோவில்களும் உள்ளன.

செவ்வாய் இரவு மண்ணால் பெரிய கங்கம்மா உருவத்தைக் செய்வர். அன்றைய இரவு இரண்டு மணியிலிருந்து காலை 6 மணியளவுவரை அதை இருக்கச் செய்து அழித்துவிடுவர். இதற்குள் அனைவரும் அவளை வணங்கிடுவர். அதற்குமேல் அவ்வுருவம் இருந்தால் அவளின் பார்வை மக்களுக்குக் கெடுதியை விளைவிக்கும் என்ற நம்பிக்கை இருந்துவருகிறது.

### வேண்டுதல்கள்

பொங்கல் இடல், கோழி ஆடுகளை பலியிடல், சப்பரங்கள் தரித்தல், கூழ் ஊற்றுதல், பல வேடங்கள் தரித்தல் முதலியவற்றை மக்கள் கங்கம்மாவிற்கு வேண்டுதல்களாகச் செலுத்துவர்.

பூ, தேங்காய், சாம்பிராணி, மஞ்சள் குங்குமம் முதலியவற்றைப் பொதுவாகவும் கறுப்பு வளையல்கள், (செவ்வளை) காதுவளை, வேப்பிலை ஆகியவற்றைச் சிறப்பாகவும் பயன்படுத்துவர்.

திருவிழாக் காலங்களில் வரும் செவ்வாய், வெள்ளி நாட்களில் கங்கம்மாவிற்குப் பொங்கலிட்டு நெய்வேத்தியம் செய்வர்.

**பலியிடுதல்**

பலியிட்ட உயிரின் இரத்தத்தை அன்னத்தில் கலந்து அதைப் 'பொலியோ பொலி' என்று சொல்லிக்கொண்டு கழனிகளில் மாட்டுக் கொட்டகைகளில்—ஊர் வெளிப் புறங்களில் சிதறுவார்கள். இச் சோறு இட்ட இடங்களில் யாதொரு தீங்கும் நிகழாமல் நன்மை விளையும் என்பது அவர்களின் நம்பிக்கை. அந் நம்பிக்கைகட்கு ஏற்றவாறு அவர்கள் சுகமாகவே வாழ்கிறார்கள். அதாவது இரத்ததாகம் கொண்ட கெட்ட ஆவிகட்கு அவற்றின் தாகத்தைத் தீர்த்து அவற்றால் தீங்குவராமல் இருக்கவே இவ்வாறு செய்கின்றனர்.

**பலியிடுதலின் நோக்கம்**

பலியிடுதலின் அடிப்படை நோக்கமே தெய்வத்தைத் திருப்திப் படுத்துவதே ஆகும். ஆவியாகிய தெய்வங்கள் இரத்ததாகம் கொண்டவை. அவற்றின் இரத்ததாகத் தைத் தீர்க்கவே மிருகங்களைப் பலியிடுகின்றனர். ஒரு காலத்தில் நரபலி இந் நோக்கத்தில்தான் நடை பெற்றிருக்கவேண்டும். பலியிடும்பொழுது இரத்தத்தைத் தெய்வம் ஏற்றுக்கொள்வதாக நம்பிக்கை. இரத்தம் இங்கு

உயிருக்குச் சமம். அதாவது உயிரைத் தெய்வத்திற்குக் கொடுத்ததாகக் கொள்ளவேண்டும்.

## பலிமுறம் எடுத்தல்

கங்கம்மா விழாவில் மிகவும் குறிப்பிடத்தக்கது பலிமுறம் எடுத்தல். கிராமங்களில் எருமை, ஆடு இவற்றைப் பலியிடுவதோடு செம்மறி ஆட்டையும் பலி யிடுவர். அதன் வயிற்றைக் கிழித்துக் குடலை எடுத்துக் கழுத்தில் மாலையாக அணிந்துகொண்டு, அதன் இரத்தம் கலந்த அன்னத்தை முறம் நிறைய எடுத்துக்கொண்டு பறை வாத்தியங்களோடு தெருக்களில் சுற்றுவார்கள். ஊர் வெளிப்புற வயல்களிலும் சுற்றுவர். பொலிசோற்றை 'பொலியோ—பொலி' என்று பயிர் பச்சைகள்மேல் சிதறுவர். இதையே பலிமுறம் எடுத்தல் என்பர். இம் முறத்தை அவ்வூர் பறையர் எடுத்துக் கொள்வர். இவ்வாறு செய்வதால் அவ்வூரில் எல்லாம் சுபமாய் முடியும் என்பது நம்பிக்கை.

## வேடங்கள் தரித்தல்

நகரங்களிலும்—கிராமங்களிலும் ஜாத்திரைக்கு முன் தினமோ, ஜாத்திரை நாளிலோ வேண்டுதல்படி பல வேடங்களைத் தரிப்பர். திருப்பதி, சித்தூர் நகரங்களில் சாட்டு வைத்த மறுநாளிலிருந்து ஒவ்வொரு நாளும் ஒரு வேடத்தைப் போட்டுத் தம் வேண்டுதல்களைச் செலுத்துவர்.

## ஆயிரம் கண் பானையை எடுத்தல்

இவ் வழக்கம் இவ் விழாவில் குறிப்பிடத்தக்கது. இதையும் வேண்டுதல்களாகச் செய்வர். பல துளைகள்

இட்ட சிறிய பானையில் விளக்கேற்றிப் பானைக்கு மஞ்சள் குங்குமம் இட்டு, அதற்கு வேப்பிலையைக் கட்டி, பெரியவர்களும் சிறியவர்களும் தூய்மையான நிலையில் விரதம் இருந்து அவர்களும் வேப்பிலையைத் தரித்துக் கொண்டு அப் பானையைக் கங்கம்மா இருக்கும் இடத்திற்கு எடுத்துச் செல்வர். அதை எடுத்துக்கொண்டே கங்கம்மா கோவிலை மூன்று முறை சுற்றி வந்து வணங்கி இறுதியில் அதைக் கீழேபோட்டு உடைத்துவிடுவர்.

### சப்பரம் எடுத்தல்

மூங்கில் பிளவுகளால் (தப்பை) கோபுரம் வடிவில் ஓர் ஆள் தூக்கும் எடையில் செய்யப்படுவது இந்தச் சப்பரம். இதைப் பூ முதலியவற்றால் அலங்கரிப்பர். தலைக்குமேல் இதைக் கட்டிக்கொண்டு ஆடியபடி வேசாலம்ம கங்கம்மா விடம் முதலில் சென்று தரிசித்து, பிறகு சின்ன கங்கம்மா, பெரிய கங்கம்மா ஆகியோரைத் தரிசிப்பர். சப்பரம் எடுப்போர் பலகைகளின் ஒலிக்கேற்றவாறு ஆடுவர். கங்கம்மா தொடர்பான நாட்டுப்புறப் பாடல்களையும் பாடுவர். இந்தச் சப்பரம் எடுத்தல் திருப்பதியில் மட்டும் நடக்கிறது.

### கூழ் ஊற்றுதல்

எல்லாக் கிராம நகரங்களிலும் திருவிழா நடக்கும் செவ்வாய் அன்று காலையில் பானை நிறைய கூழ் காய்ச்சி வீட்டில் கங்கம்மாவிற்கு நைவேத்தியம் செய்து அதைச் சுற்றுப்புறங்களில் உள்ள அனைவரையும் அழைத்து அவர்களுக்கு ஊற்றுவர். வெள்ளிக் கிழமை களிலும் கூழ் ஊற்றுவதுண்டு. இவ் வழக்கம் தவறாது மேற்கொள்ளப்படுகிறது. அந்தக் கூழைக் கங்கம்மா

ஊற்றுதைக்வதாகக் கருதி, அதை ஊற்றுவோர் எந்தக் குறையும் இல்லாமல் இருப்பர் என்பது மக்களின் நம்பிக்கை.

**கங்கம்மாவைச் சுற்றி வருதல்**

மக்கள் தமக்கு ஏதாவது தீங்கு வரும்பொழுதும், அத் தீமை தீரும்பொழுதும் தாம் நினைத்தது நல்லதாய் முடியவேண்டும் என்றும் பிரார்த்தனையைச் செய்து கொள்வர். அப் பிரார்த்தனை பலித்தால் திருவிழாவன்று குளித்துவிட்டு இடுப்பில் வேப்பிலையைத் தரித்துக் கொண்டு கையில் தேங்காயை வைத்தபடி கங்கம்மாவை மூன்று முறையோ அல்லது ஐந்து முறையோ புரண்டபடி சுற்றுவார்கள். இறுதியாக அவர்கள் அம்மனை தரிசித்துக் கையில் உள்ள தேங்காயைச் சூரையிட்டுத் தம் வேண்டுதலை நிறைவேற்றுவர்.

**சமர்ப்பணம்**

குழந்தை இல்லாத நாட்டுப்புற மக்கள் குழந்தைக் காகக் கங்கம்மாவை வேண்டிக்கொள்வர். அன்னதானம், துணி தானம் செய்வதாக வேண்டிக்கொள்வர். குழந்தை பிறந்ததும் தம் வேண்டுதல்களைக் கங்கம்மா கோவிலிலோ தம் வீட்டிலோ அன்னதானத்தையும் துணி தானத்தையும் செய்து நிறைவேற்றிக்கொள்வர். அவ்வாறு பிறந்த குழந்தைக்குக் கங்கம்மா, கங்கக்கா அல்லது கங்கய்யா, கங்கப்பா, கங்குலு என்னும் பெயர்களைச் சூட்டுவது முண்டு.

**சுண்டல் கொடுத்தல்**

இசுகம்மா, தட்டம்மா, கவதலம்மா, பெத்தம்மா முதலிய நோய்களுக்குக் காரணம் கங்கம்மாவே என்று

கருதுவது நாட்டுப் புறமக்களின் நம்பிக்கை. இந் நோய் வந்தவர்கள் குணமடைய வேண்டி, கங்கம்மாவை வேண்டிக் கொள்வர். குணமானதும் பருப்பு வகைகளுள் ஏதாவது ஒரு பருப்பைச் சுண்டல் செய்து அதில் வேப்பிலையைக் கலந்து மக்களுக்குக் கொடுக்கின்ற வழக்கம் இப்பகுதிகளில் இருந்துவருகிறது. இந்நோய் வந்தவர்கள் தம் வீட்டிலும் நோய் வந்தவரைச் சுற்றிலும் வேப்பிலையை வைப்பார்கள். வேப்பிலை கங்கம்மாவிற்கு உகந்தது. அதனால் நோயாளிக்கு எந்தத் தீட்டும் வராது. விரைவில் நோய் குணமாகும் என்பது அவர்களது நம்பிக்கை.

இதில் விஞ்ஞானத் தொடர்பான இரகசியம் மறைந்துள்ளது. பச்சையான வேப்பிலையின் வாசனையை நோயாளி நுகரும் வாய்ப்பு உள்ளது. வேப்பிலையில் இருக்கும் மருத்துவசக்தி நோயாளிக்குப் பயன்பட்டு நோயாளி குணமாவான். இதனால்தான் நாள்தோறும் நோயாளியைச் சுற்றிப் புதிய வேப்பிலையை வைக்கிறார்கள்.

பொதுவாகக் கங்கம்மாவிற்குப் பிராமணர்கள் பூசாரிகளாக இருப்பதில்லை. இடையர்களும் வண்ணார்களும் பூசாரிகளாய் இருப்பார்கள். அரிஜனவாடாவில் அவர்கள் அமைத்துக் கொள்ளும் கங்கம்மாவிற்கு அவர்களின் வண்ணான் பூசாரியாய் இருப்பான்.

சித்தூர் மாவட்டத்தில் மற்ற நாட்டுப்புற சிறு தெய்வங்களைக் காட்டிலும் கங்கம்மாவிற்குப் பூசைகள் அதிகம். அத்தகு சக்தி வாய்ந்த முக்கியத் தெய்வமாகக் கங்கம்மா கருதப்படுகிறாள். அவள் நினைத்தால் எந்தக் குறையும் நீங்கும் என்பது அவர்கள் நம்பிக்கை.

**திருப்பதி கங்கம்மா பற்றிய சில சிறப்புச் செய்திகள்**

திருப்பதியில் வீற்றிருக்கும் கங்கம்மா பெரிய கங்கம்மா (பெத்த கங்கம்மா) சிறிய கங்கம்மா (சின்ன கங்கம்மா) என்று இரு நிலைகளில் விளங்குகிறாள். பெரிய கங்கம்மாவிற்கு அலங்காரம் செய்து பூசைகள் செய்வர். சிறிய கங்கம்மாவிற்குப் பூசைகள் மட்டுமன்றிச் சிறப்பாகத் திருவிழாவும் செய்வர். இச் சிறிய கங்கம்மாவே தாதய்யகுண்ட கங்கம்மாவாகவும் திகழ் கிறாள். இவளுக்குச் செய்யும் திருவிழா சித்தூர் மாவட்டத்தில் மட்டுமன்றி ஆந்திரா முழுவதும் சிறப்புப் பெற்றுவருகிறது.

இத் திருவிழாவில் வேடம் தரித்தல், மெரிகால் ஆட்டம், மரக்கொம்பைக் காலில் கட்டி ஆடுதல் சப்பரங் கள் கொண்டு ஆடுதல் முதலியன குறிப்பிடத்தக்கன.

**வேடம் தரித்தல்**

திருப்பதியில் கங்கம்மா விழா ஏழு நாட்கள் நடைபெறும், ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு வேடம் தரித்து ஆடுவர். இவ் வழக்கம் இன்றும் இருக்கிறது. ஆனால் முன்பு இருந்ததுபோல் இன்று பெருமளவில் இல்லை. ஏழுநாட்களிலும் முறையே பைராகி வேடம், பண்டவேடம், தோட்டி வேடம், பண்ட்ரேர்த்து வேடம், தொர வேடம், மாதங்கி வேடம், சப்பரங்கள் ஆகிய வேடங்களைத் தரித்துக் கொள்வர். பெரும் அளவில் வேண்டுதலின் காரணமாகவே வேடங்கள் தரிப்பர். ஒரு சிலர் விளையாட்டாகவும் தரிப்பதுண்டு.

வேடங்கள் தரித்தோர் கங்கம்மாவை அகச்சுவை நிறைந்த பழிச் சொற்களால் பழிப்பர். இவ்வாறு

செய்வதை அவள் விரும்புவாள் என்பது அவர்கள் நம்பிக்கை. தொர வேடங்களைப் பெரும்பான்மையோர் தம் மகிழ்ச்சிக்காகவே போடுவர். இவ் வேடங்களைத் திருப்பதியில் உள்ள மக்களேயன்றி அதன் சுற்றுப்புறங் களில் உள்ள கிராம மக்களும் போடுவர். இவ்விழாவில் அவர்களும் கலந்துகொள்வர்.

### பைராகிவேடம்

இது முதல்நாள் வேடம். செவ்வாய்க்கிழமை சாட்டு வைத்ததும், அடுத்தநாள் புதன்கிழமை இவ்வேடத்தைப் போடுவர். இடுப்புக்கு மட்டும் துணிக்கட்டிக் கொண்டு திருநாமத்தைத் தூளாக்கி உடலெல்லாம் வெண்மை யாகப் பூசிக்கொள்வர்; கழுத்தில் ஒருவகைக் காய்களால் ஆன மாலையை அணிந்துகொள்வர்; கையில் பெரிய மூங்கிலைக் கொண்டு கங்கம்மாளையும் கண்ணுக்குத் தெரிவோரையும் வாய்க்கு வந்தவாறெல்லாம் திட்டுவர். இதை யாரும் பொருட்படுத்தக் கூடாது. இவ்வாறு திட்டியபடி இவர்கள் "வேஷாலம்மா" கோயிலுக்குச் செல்வர். அந்த அம்மாவை வணங்கிவிட்டு அடுத்து சின்ன கங்கம்மா - கோயிலுக்குச் செல்வர். அவளையும் வணங்கிவிட்டு ஊரெல்லாம் சுற்றி வந்து இறுதியாக வீட்டிற்குச் சென்று வேடத்தைக் கலைத்துவிடுவர்.

### பண்டவேடம்

இது இரண்டாம் நாளான வியாழக்கிழமையன்று போடும் வேடம். பக்தியால் பெரியவர்களும் சிறியவர் களும் உடலெல்லாம் வண்ண வண்ணச் சாயங்கள் பூசிக்கொண்டு கழுத்திலும் கையிலும் மாலையைத் தரித்துக் கொண்டு கையில் கொம்பை ஏந்தியபடி வாய்க்கு வந்தவாறெல்லாம் ஏசுவர்.

இவர்களும் முதலில் வேஷாலம்மாவையும் பின்னர் சின்ன கங்கம்மாவையும் வணங்கி இறுதியில் பெரிய கங்கம்மாவை வணங்கிவிட்டு ஊரெல்லாம் சுற்றிவிட்டு வீட்டிற்குச் சென்று வேடத்தைக் கலைத்துவிடுவர்.

### தோட்டிவேடம்

இது மூன்றாம் நாளில் போடும் வேடமாகும். தோட்டிவேலை செய்வோரும், கூலிவேலை செய்வோரும் பெருமளவில் இவ்வேடத்தைப் போடுவர். உடலெல்லாம் கருப்பாகத் தார், கருஞ்சாயம், கரித்தூள் இவற்றுள் ஒன்றைப் பூசிக்கொண்டு இடுப்புக்கு வேப்பம் மண்டை களால் ஆன மாலையைக் கட்டிக்கொண்டு கையில் முறத்தையும் துடைப்பத்தையும் எடுத்துக்கொண்டு ஊரெல்லாம் சுற்றுவார்கள். யாரையாவது அவற்றால் அடித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை; யாரும் கேட்கவும் கூடாது. ஆகவே அவ் வேடத்தைக் கண்டதும் மக்கள் பயந்து ஓடி ஒளிந்துக்கொள்வர். இவர்கள் கங்கம்மாவையும் எதிர்ப்படுவோரையும் இழிவான சொற்களால் திட்டுவார்கள். இறுதியில் கங்கம்மாவைத் தரிசித்துக் கையில் உள்ள முறத்தையும் துடைப்பத்தை யும் அங்கேயே போட்டுவிட்டு வீட்டிற்கு வந்துவிடுவர்.

### பண்ட்ரோர்த்து வேடம்

இந்த வேடத்தை நான்காம் நாளான சனிக்கிழமை யில் போடுவர். சந்தனத்தால் உடலெல்லாம் பூசிக் கொள்வர். முகத்தை அழகுபடுத்திக்கொண்டு தலைமயிர் அலையாமல் இருக்க ரிப்பனால் கட்டிக்கொள்வர். இவர்கள் குழுவாகச் சேர்ந்து தோட்டிகள் பலகைகள் அடித்துப் பாட்டுப் பாட அதற்கேற்றவாறு இவர்கள்

ஆடுவர். சில சமயங்களில் இவர்களும் பாடியபடி ஆடுவதுண்டு. இவர்கள் பாடும் பாடல்கள் பெரும்பான்மையாகக் கங்கம்மாவை அசிங்கமாகக் கூறுவதாகவே இருக்கும். 15லிருந்து 25 வயதிற்கு உட்பட்டவர்கள் மட்டும் இவ் வேடத்தைப் பொதுவாகப் போடுவர்.

**தொர வேடம்**

இது ஐந்தாம் நாளில் போடுவது. இந் நாளில் விழா மிகவும் சிறப்பாக இருக்கும். அன்று புராணம், நாட்டுப்புறத் தொடர்பான வேடங்களைப் போடுவர். சிவன், திருமால், இராமன், கண்ணன், அனுமன், துரியோதனன், முருகன், கர்ணன், பாண்டவர்கள், சாமியார் முதலிய புராணத் தொடர்பான வேடங் களைப் போடுவர். அரசன், மந்திரி, வேலைக்காரன், சோதிடன், மந்திரக்காரன். தண்டல் நாயகன் (கலக்டர்), மருத்துவன், நோயாளி, குடிகாரன், திருடன், ரௌடி, வண்ணான், அம்மட்டன் இத்தகைய வேடங்களையும் பலவகையான நாட்டுப்புற மக்கள் வேடங்களையும் போடுவர். இவையேயன்றி ஆண்கள் பெண் வேடங்களை யும் போடுவர். இது மிகவும் சிறப்பாய் இருக்கும். ஆண் பெண் ஜோடி வேடம் இட்டு ஊரெல்லாம் சுற்றுவார்கள். எல்லோரும் நகைக்குமாறு விளையாட்டாய் காமச் சொற் களை அதிகம் பேசுவார்கள். இந் நாளில் திருப்பதி முழுவதும் கூட்டம் அதிகமாக இருக்கும். வேடங்கள் தரித்தோர் அதிகமாகக் காணப்படுவர். பார்க்க வருவோர் அழகாய்ச் சிங்காரித்துக்கொண்டு வருவர். ஊரெல்லாம் அன்று புதுக் களையுடன் இருக்கும். காலை 6 மணி முதல் இரவு 10 மணிவரை இவ் வேடங்கள் இருக்கும். புராணத் தொடர்பான வேடங்களைத் தரித்தோர் புராணக் கதைகளைப் பாடல் வடிவில் பாடுவர்.

### மாதங்கி வேடம்

இவ் வேடத்தைப் பெரும்பாலும் ஆறாவது நாளில் போடுவர். சில இடங்களில் இவ் வேடத்தை நான்கு அல்லது ஐந்தாம் நாளிலும் போடுவது உண்டு. முக்கிய மாக வேண்டுதல் உள்ளவர்களே இவ் வேடத்தைப் புனைவர். திங்கள் காலையில் குளித்துவிட்டு மஞ்சள் தோய்ந்த ஆடையை அணிந்து கொள்வர். மஞ்சள் தோய்த்தத் துணியில் கரிய பொட்டுக்கள் இட்டு அதைத் தலைக்குக் கட்டிக்கொள்வர். தலையிலும் கழுத்திலும் பூமாலையை அணிந்துகொள்வர். வாத்தியங்கள் உதவி யால் பாடியும் ஆடியும் கங்கம்மா கோவிலுக்குச் சென்று தம் வேண்டுதலை நிறைவேற்றிக்கொள்வர்.

### சப்பரங்கள்

முன்பே கூறப்பட்டது. காண்க பக்கம்: 35. திருப்பதியி ஏழாம் நாளில் சப்பரங்கள் எடுப்பர்.

திருப்பதியிலிருந்து 30 மைல் தூரத்தில் உள்ள காளத்தி நகரத்திலும் கங்கம்மா விழாவை நன்றாகக் கொண்டாடுகின்றனர். இங்கு ஏழு கங்கம்மா உருவங் களை வைத்து வணங்குதல் குறிப்பிடத்தக்கது. இவ்வாறு வேறு எங்கும் செய்வதில்லை. மூங்கில் தப்பைகளால் செய்யப்பட்ட கூடையில் ஏழு கங்கம்மா உருவங்களை வைத்து ஊர்வலம் வருவர். இவ்வாறு வேறு எங்கும் நடைபெறுவதில்லை.

புங்கனூர் நகரத்திலும் கங்கம்மா விழாவை நன்கு கொண்டாடுகின்றனர்; ஊர்வலமும் வருகின்றனர். இவ் ஊரிலும் தமிழ்நாட்டுப் புறப்பகுதிகளில் இருப்பதுபோன்று ஊர்வலத்தின் பொழுது கரகாட்டம் ஆடுகிறார்கள். தமிழகத்தில் உள்ள சில பகுதிகளில் கரகாட்டம் ஆடுவதற்

கொன்று ஒரு குழு இருக்கும். இருவர் பெண்களும் இருவரோ மூவரோ ஆண்களும் இருப்பர். பெண்கள் கரகாட்டம் செய்வர். ஆண்கள் ஆட்டத்திற்கு ஏற்றவாறு வாத்தியங்களை வாசிப்பர். ஒரு பஃபூனும் இருப்பான். அவன் அவ்வப்பொழுது வேடிக்கைகளைச் செய்வான்.

'கரகு' என்பது ஒரு பானையின் மூஞ்சிமேல் ஏறக் குறைய 3 அடி அல்லது 4 அடி உயரமுள்ள பூக்களால் ஜோடித்த கோபுரம் போன்ற உருவத்தைவைத்து, ஆடாமலும் விழாமலும் இருகக் கட்டுவர். அதனைத் தலைமேல் வைத்து இரு கைகளாலும் பிடித்துக் கொள்ளாமல் ஆடுவர். இதுவே கரகாட்டம் ஆகும். இதனைக் கங்கம்மா விழாநாள் இரவில் ஏற்பாடு செய்வார்கள்.

எல்லா ஊர்களிலும் விக்கிரக வடிவில் கோவிலில் இருக்கும் கங்கம்மாவிற்கு மக்கள் பூசைகள், விழாக்கள் நடத்துவர். ஊர்வலமும் நடத்துவர். ஆனால் மண்ணாலோ கல்லாலோசெய்யப்பட்ட கங்கம்மாவிற்குத் திருவிழா நாட்களில் மட்டும்தான் பூசைகள் நடக்கும், ஊர்வலத்திற்குக் கொண்டுபோவதில்லை.

எல்லாக் கிராமங்களிலும் மற்ற தேவதைகளைவிட இந்தத் தேவதைக்குத்தான் மிகவும் முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். இந்தக் கங்கம்மா குலத்தெய்வ மாகவும் ஊர்த்தெய்வமாகவும் திகழ்ந்து வருகிறாள்.

அம்மை, மசூசி, தூமு, கலரா போன்ற நோய்களி லிருந்து கங்கம்மா காப்பதாக மக்கள் நம்புகின்றனர். ஆகவேதான் இந்தக் கங்கம்மாவிற்கு அதிகமுக்கியத்துவம் தருகின்றனர். கங்கம்மாவுக்கு அடுத்த நிலையில் கீழ்க் குறிப்பிட்டுள்ள தேவதைகளுக்கு கிராம மக்கள் வணங்கி யும் விழாக்கள் கொண்டாடியும் வருகிறார்கள்.

அவை வருமாறு

1. அக்ககாரு
2. எல்லம்ம
3. கானுகுலம்ம
4. காமம்ம
5. கொந்தம்ம
6. சீராலம்ம
7. திரௌபதியம்ம
8. பங்காரம்ம
9. மாதம்ம
10. முத்தியாலம்ம
11. மூலஸ்த்தானம்ம
12. ரெட்டம்ம
13. விசுகோடாலம்ம
14. சௌடம்ம
15. ரேணுகம்ம
16. காளியம்ம
17. துர்க்கை
18. மாரியம்ம

முதலியோர் ஆவர்.

### அக்க தேவதைகள்

அக்க தேவதைகள் எழுவர். இவர்கள் ஊருக்கு வெளியில் ஆலமரம், அரசமரம் அடியிலும், வேப்பமரம் அடியிலும், ஏரி, குளம், குட்டை முதலிய இடங்களிலும் நிலவியிருப்பர். கல் உருவிலும், குயவனால் செய்யப்பட்ட மண்ணால் ஆன—குதிரை போன்ற உருவங்களிலும் இவர்கள் இருப்பர். இவர்களுக்கு நல்ல இளைஞர் மேலும், திருமணமாகாத பெண்கள் மீதும் மிகவும் விருப்பம்; எனவே அவர்களை வசப்படுத்திக்கொள்ளவும் இவர்கள் பின்வாங்குவதில்லை. அவ்விதம் வசப்படுத்திக் கொள்வதே 'கனிகலு சோகுட' என்று தெலுங்கில் கூறுவர். இவர்களை பூசிப்பதால் இவர்கள் இளைஞர் களுக்கு எந்தவிதமான தீங்கையும் தரமாட்டார்கள், என்பது மக்கள் நம்பிக்கை. இவர்களுக்கு நாள்தோறும் பூசைசெய்வர். வாரத்திற்கு ஒருநாள் சிறப்பாக வெள்ளிக் கிழமை பூசை நடைபெறுவது உண்டு.

புற்றுக்கருகில், பாம்பு உருவத்தில் அக்கதேவதைகளை வழிபடுவர் நாட்டுப்புற மக்கள். போதுராஜ என்று அழைக்கப்படும் ஆண்தெய்வம் அக்க தேவதைகளின் அண்ணனாகக் கருதப்படுவான். இத் தேவதைகளுக்குப் பூசைகள் தவிர, சிறப்பாகச் செய்யப்படும் திருவிழாவும் வேறு சிறப்பு நிகழ்ச்சிகளும் இல்லை.

**எல்லம்மா**

இவ்வம்மையார் மஹாரம்ம, மாதம்மா, மாரம்மா பெயர்களில் அழைக்கப்படுகின்றாள். இவள் விக்கிரக உருவத்திலோ சிலை உருவத்திலோ அல்லது பாம்பு, சூலம் உருவத்திலோ இருப்பாள். நாட்டுப்புற மக்களினும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இவ்வம்மையை அதிகம் துதிக்கின்றனர். இவள் சந்தான தேவதையாக விளங்கி வருகிறாள்.

இவள் தொடர்பாய் ஒரு கதை வழங்கப்படுகிறது எல்லம்மா பரசுராமனின் தாயான ரேணுகாதேவி யாவாள். இவள் மாஹூரம் என்ற கிராமத்தில் நிலவி வருவதால் 'மஹூவரம்' என்ற பெயரில் வழங்கப்படுகிறாள். மேலும் ராயலசீம என்ற பகுதியிலும் 'எல்லம்ம' என்ற பெயரிலும் அழைக்கப்படுகிறாள். சித்தூர் மாவட்டத்தில் 'பாலமூரு' என்ற கிராமத்தில் உள்ள மக்கள் இவள் கதையை ஓர் இதிகாசமாய் இரண்டு நாட்கள் 'பவனிக' என்ற வாத்தியத்தை அடித்தபடி மிகச் சுவையாய் கூறுகின்றனர். இதில் ஆடவரும் பெண்டிரும் இடம்பெறுவர். கவ்வ உருவில் எல்லம்மா உள்ளாள். இவளைத் தொழுது பிறகு குறி சொல்லத் துவங்குவர்.

மற்ற தேவதைகள் போன்று இவளுக்கும் ஒவ்வொரு நாளும் பூசை நடைபெறும். திருவிழா நாட்களில்

எல்லம்மா விக்கிரகத்தை ஊர்வலம் கொண்டுவருவர். மிக்க விருப்பத்தோடு பலகைகள், கொம்புகள், மத்தளம் முதலிய வாத்தியங்களின் முழக்கமோடு இந்த அம்மையார் ஊர்வலம் வருகிறாள். அப்பொழுது ஊர் மக்கள் ஆனந்தமாய் ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் போவார்கள்.

சாதாரணமாக இவளுக்குக் கோழி, ஆடு, எருமை முதலியவற்றைப் பலிஇடுவர். பூவணிந்து கற்பூரம் ஏற்றி, தேங்காய் உடைத்து ஒவ்வொரு வீட்டாரும் இவளை வணங்குவர். இவ்வாறாகச் சேரிமக்கள் எல்லம்மாவை வணங்குகின்றனர்.

**கானகலம்ம**

புத்தூர் வட்டத்து கார்வேட்டு நகரம் கிராமத்தில் கிராமதேவதையாக இவள் வீற்றிருக்கிறாள். இவளைச் சிறந்த மகிமைகொண்ட தேவதையாக ஊர்மக்கள் கருதுகின்றனர். ஆவணி மாதத்தில் வரும் பௌர்ணமி நாளில் அவ்வூர் மக்கள் படகு செய்து கலசம் வைத்து பூசை செய்வார்கள்; ஊர்வலமும் நடைபெறும்; நாள் தோறும் பூசைகளும் நிகழும். இவ்வம்மையார் பிள்ளைகள் இல்லாதவர்க்குப் பிள்ளைகளைத் தருவாள். குறைகள் உடையோர் தம் துயர்களையும் தீர்த்து வைப்பாள்.

இவ்வம்மை குறித்த ஒரு கதை அவ்வூரில் வழங்கப் பட்டு வருகிறது. ஒரு பிராமணப் பிள்ளை நாள்தோறும் போடிகுண்டாவில் (ஒரு சிறிய மலையின் பெயர்) மாடு மேய்த்து வந்தான். அவனுடன் ஓர் இடையர் பெண்ணும் மாடு மேய்த்து வந்தாள். இருவரும் ஒருவரை ஒருவர் விரும்பினர். ஒருநாள் போடிகுண்டாவில் மாடுகள்

மேய்த்துத் திரும்பி வரும்பொழுது ஒரு குளத்தில் நீர் பருகிக் கொண்டிருக்கும்பொழுது தவறிக் குளத்தில் விழுந்து இருவரும் இறந்துவிட்டனர். சில நாட்கள செல்ல அந்த இடையர்ப் பெண்ணே ஒரு புற்றில் கானகலம்மா என்ற பெயரில்தான் இருப்பதாக அவ்வூர் அரசனிடம் சொல்ல அரசன் அவளுக்குக் கோவில் கட்டி வழிபாடுகள் செய்தான். இவ் வழிபாடு இன்றும் நடை பெறுகிறது.

காமம்ம

பேரண்டாலு என்று சொல்லப்படும் பெண் கிராமத் தெய்வங்களில் இவள் குறிப்பிடத்தக்கவள். அஞ்சம்ம, வீரம்ம, எருகல நாஞ்சாரம்ம, கன்னிகாம்ம, சின்னம்ம, நல்ல தங்காள், பாபம்ம, ராவுலம்ம முதலியவர்களும் பேரண்டாலு பெண் தெய்வங்களே.

சித்தூர் மாவட்டத்தில் பல கிராமங்களில் காமம்ம கிராமத் தேவதையாகத் திகழ்ந்து வருகிறாள். குல, மத பேதமின்றி அனைவரும் இவளைத் துதிக்கின்றனர்.

இத் தேவதையின் பிறந்த இடம் ஆந்திராவில் கிழக்குக் கோதாவரியைச் சார்ந்த சாமர்ல கோட்டை. இவள் பிறந்த சில நாட்களில் பெற்றோர் இறந்து விட்டனர்; பெரியப்பா இவளை வளர்த்து ஆளாக்கினார். சின்ன வயதிலேயே திருமணம் நடந்தது. கணவன் இவளைப் பிறந்த வீட்டிலேயே விட்டுவிட்டு உத்தியோகத் தில் சேர்ந்தான். ஏதோ சில காரணங்களால் கணவன் இறந்துவிட்டான். காமம்மாவும் கணவனோடு இறக்கத் துணிந்தாள். அதற்கு அந்த ஊர் கலக்டர் ஏற்றுக்கொள்ள வில்லை. என்றாலும் அவள் வீட்டில் 'அரி நாராயணா'

என்று ஜெபம் செய்துகொண்டே உயிர் துறந்தாள். இறந்த அவள் தனது மகத்துவத்தால் நெருப்புக் குழியில் சிவப்பு கருவப் பூக்களாய்த் தோன்றினாள். அதனால் அவள் ஞாபகார்த்தமாகக் காமம்ம திருவிழா நடைபெறு கிறது. அன்று நெருப்புக் குழியையும் உண்டாக்கு கின்றனர்.

காமம்ம கோவிலில் விக்கிரக வடிவில் நிலவி யுள்ளாள்.

**கொந்தம்ம** (கழுத்தம்மை)

பாண்டவர்களின் தாய் குந்திதேவியே கொந்தம்ம என்ற நம்பிக்கை கிராம மக்களில் இன்றும் இருந்து வருகிறது. அந்த அம்மாவைப்பற்றி ஒரு கதையும் வழக்கத்தில் உள்ளது.

மகாபாரதப் போர் முடிந்ததும் தர்மராஜா தர்பணம் செய்யும்பொழுது கர்ணன் கையை நீட்டினான். அதைக் கண்ட தர்மராஜா வியப்புடன் வியாசமுனிவரைக் கேட்க, கர்ணன் உன் பெரிய அண்ணன் அவனுக்கும் நீ தர்ப்பணம் செய்என்று பதிலளித் தார். தர்மராஜாவும் அவ்வாறு செய்து உண்மையை, கர்ணன் குந்திதேவியின் புதல்வனான செய்தியைக் குந்திதேவியின்மூலம் அறிந்தான். ஆனால் இச் செய்தி யைக் குந்திதேவி இதுவரை தனக்குக் கூறாமல் மறைத்த தற்காகக் கோபங்கொண்டு 'நீ பறையர்களின் குல தேவதையாய்க் கடவாய்' என்று அவளைச் சபித்தான் தர்மராஜா. அன்றிலிருந்து அவள் பறையர்களின் குல தேவதையாக இருந்து பின்னர் கிராம தேவதையாக மாறினாள்.

இவள் விக்கிரக வடிவில் கோவிலில் வீற்றிரு க்கின்றாள் மண்ணால் இவளைச் செய்து தொழும் வழக்க மும் உண்டு. பறையர்களே இவளுக்குப் பெரும்பான்மை யாகப்பூசைகள் செய்கின்றனர்; ஆண்டிற்கு ஒருமுறை சிறப்பாகத் திருவிழா செய்கின்றனர். அன்று இவள் விக்கிரகத்தை ஊர்வலம் செய்வது உண்டு.

**திரௌபதி அம்மா**

இத் தெய்வம் ஒரு முக்கிய கிராம தேவதையாகவும் வேத கடவுளர் நெறியில் அமைந்த தெய்வமாகவும் திகழ்ந்து வருகிறாள். இவளுக்கு மற்ற தேவதைகளுக்குத் தருவது போன்று, தருவதில்லை. இவளுக்குக் கோவில் பலிகளும் உண்டு. தர்மராஜா விழாவோடு திரௌபதி விழாவையும் சேர்த்துக் கொண்டாடுகின்றனர். மரத்தாலோ உலோகத்தாலோ ஆன சிலைகள் இவ் வம்மைக்கு உண்டு. இவள் நல்லவர்களுக்கு நல்லவளாகவும் தீயவர்களுக்குத் தீயவளாகவும் காட்சியளிக்கின்றாள். இவள் ஆதி சக்தியின் அவதாரமாகும் ஆதி சக்தியே ரேணுகா, சீதை, திரௌபதி ஆக அவதாரம் எடுத்த தாகக் கிராம மக்களின் நம்பிக்கை. பிரமன், திருமால், சிவன் மூவருக்கும் இந்த ஆதி சக்தியே மூலம் என்பதும் அவர்கள் நம்பிக்கை.

இவளுக்கு ஆடி மாதத்தில் தர்மராஜா திருவிழா வோடு விழா நடத்தப்படுகிறது. திரௌபதி அம்மா திருவிழாவை 'நெருப்புத் திருவிழா' என்றும் கூறுவர். இவ் விழாவில் நெருப்புக்குழி தாண்டுதல் நிகழ்ச்சி மிகவும் குறிப்பிடத்தக்கது. இதுகுறித்து ஒரு கதை உள்ளது. முன்பு துவாபர யுகத்தில் நாட்டில் மழை இன்றி வறட்சி அதிகமாயிற்று. வியாசமுனிவரை, இத் துன்பத்தினின்று

விடுபட வழியைக் கேட்டனர். அவர் பாண்டவர் கதையைச் சொல்லவைத்து, வேள்வி செய்து, நெருப்பை மிதித்து உங்கள் பக்தியை நிரூபித்தால் எல்லா நன்மைகளும் ஏற்படும் என்று கூறினார். அவர்களும் அவ்வாறே செய்தனர். அன்றிலிருந்து இத் திருவிழா இன்றுவரை வழக்கத்திலிருந்து வருகிறது. நெருப்பு மிதித்தல் மாலை நேரத்தில் நடைபெறுகிறது. விரதம் இருப்போர் பக்தியுடன் நெருப்பை மிதித்துச் சென்று திரௌபதியை வழிபடுவர். உண்மையான பக்தர்களுக்கு நெருப்பால் யாதொரு தீங்கும் ஏற்படாது.

### முத்தியாலம்மா

திரிசூல உருவில் இவ்வம்மை பெரும்பாலும் ஊருக்கு வடபகுதியில் கிராமதேவதையாக வைக்கப்பட்டிருப்பாள். பார்வதியின் மறுவடிவமே இவ்வம்மை என்பது மக்களின் நம்பிக்கை. கங்கம்மாவிற்கு நடைபெறுவது போன்றே இவளுக்கும் வழிபாடு நடைபெறுகின்றது. குறிவைத்துக் கேட்கும்போது குறியில் முத்தியாலம்மா வந்து குறி வைத்தோர்க்கு நடந்ததையும், நடக்கவிருப்பதையும், குறைகளைத் தீர்க்கும் வழிவகையையும் கூறுகிறார். இதில் உண்மை உள்ளதென்று கிராமமக்கள் நம்புகின்றனர்.

### மூலஸ்த்தானம்மா

திருப்பதிக்கு அருகில் 10 மையில் தூரத்தில் உள்ள சந்திரகிரி நகரத்தில் இத் தேவதை நிலவியுள்ளாள். இவ்வூர் மக்களேயன்றி இவ்வூரைச் சுற்றியுள்ள 20 கிராமத்து மக்களும் இவளை வழிபடுகின்றனர். கோவிலில் இவ்வம்மையின் சிலை உள்ளது.

மகப்பேறுக்காகவும், குடும்ப நலத்திற்காகவும், பயிர்கள் செழித்து வளர்வதற்காகவும் இவளை மக்கள்

பிரார்த்தனை செய்துகொள்வர். நாள்தோறும் பூசைகள் நிகழ்வதோடு வெள்ளிக் கிழமையன்று சிறப்பாகப் பூசைகள் நிகழும். இவ்வம்மைக்கு ஆடுகளைப் பலி இடும் வழக்கமும் உண்டு. நியதியோடு பிரார்த்தனைகள் செய்துக்கொள்வோரின் குறைகளை இவ்வம்மை நிறை வேற்றி வருகிறாள். என் சொந்த அனுபவத்திலும் இந்த நம்பிக்கை நிறைவேறி உள்ளது.

இவ்வம்மை காளியின் தங்கை என்றும் கூறுவர். இவளுக்குச் சித்தூரை அடுத்துள்ள அரகொண்டா என்ற கிராமத்தில் இருக்கும் சிருங்காரம் என்ற முன்னால் மாநிலசட்டமன்ற உறுப்பினரின் மாந்தோட்டத்தின் மிக அருகில் ஒரு கோவிலும் உண்டு. இதுகுறித்து ஒரு கதையும் வழக்கத்தில் இருந்துவருகிறது. குறத்தி ஒருத்தி சந்திரகிரியிலிருந்து முறம், கூடைகளை விற்பதற்காக இப் பகுதிக்கு வந்துக்கொண்டிருந்தாள். வரும்வழியில் ஒரு கருங்கல் அவள் தலையில் இருக்கும் கூடையில் விழுந்தது. அவள் அதை அறிந்து அதை வெளியே வீசி எறியவும் மீண்டும் அக்கல் அவள் கூடையிலேயே விழுந்தது. அவள் மீண்டும் அதை வீசி எறியவும் அக்கல்மீண்டும் அவள் கூடையிலேயே வந்து விழுந்தது. இவ்வாறு பலமுறை கல் விழுவதும்அவள் அதை எறிவதுமாக இவ்வூரை நோக்கி வந்துகொண்டிருந்தாள். இறுதியில் இப் பகுதிக்கு வந்ததும் அவள் எறிந்த கல் இவ்விடத்தில் விழ அங்கேயே நின்று விட்டது. அதை அறிந்து ஊர்மக்கள் அக் கல்லிற்கு கோவில் கட்டி வழிபட்டனர். அக் கல்லையே மூலஸ்தானம்மா என்று அழைக்கின்றனர். இவள் சந்திரகிரியிலிருந்து கல்வடிவில் இங்கு வந்து வீற்றிருப்பதாக மக்கள் நம்பிவருகின்றனர். இன்றும் சந்திரகிரியிலிருந்து இவ்வம்மைக்குப் பண்டாரம் தரப்படுகிறது.

மாட்டுப்பொங்கலன்று சிறப்பாகப் பொங்கலிட்டு இவ்வம்மையை வணங்குகின்றனர். இக் கோவிலில் பெரிய ஒரு குளமும் உள்ளது. திருவிழா நேரத்தில் இவ்வம்மன் சிலை ஊர்வலம் வரும். முன்னர் குறிப்பிட்ட சட்டமன்ற உறுப்பினரால் இன்று இக் கோவில் பழுதுபார்க்கப்பட்டு வண்ணங்கள் தீட்டப்பட்டுள்ளது. நாட்பூசைகளும் நிகழ்கின்றன.

### ரெட்டம்மா

வாயில்பாடு வட்டத்தில் செர்லோ பல்லெ என்னும் கிராமத்தில் இவ்வம்மை வீற்றிருக்கின்றாள். இவள் மகப்பேறு தேவதையாக விளங்கிவருகிறாள். இவளைப் பற்றி ஒரு கதை உள்ளது. ரெட்டம்மா சாதாரண உழவர் குடும்பத்தில் தோன்றியவள், உடன்பிறந்தோர் எழுவர். ஒருநாள் இவள் தன் வயலுக்குச் சென்றுகொண்டிருக்கும்பொழுது இவள் அழகில் ஈடுபட்ட ஒரு நவாபு இவளை அருகில் அழைத்தான். செய்வதறியாத இவள் எதிரில் உள்ள ஒரு பெரிய குண்டுப் பாறையை வேண்டினாள். அப் பாறை இரண்டாகப் பிளந்தது ரெட்டம்மா அதன் உள்ளே செல்ல அது ஒன்றாக ஒட்டிக்கொண்டது. இவள் அதனுள் மாயமாகிவிட்டாள். அந்த நவாபும் அங்கேயே உயிர்துறந்தான். அன்றிலிருந்து இவள் அக் கிராமத்துத் தெய்வமாக நிலவிவருகிறாள். இப் பகுதி மக்கள் பலர் ரெட்டம்மா, ரெட்டண்ணா என்று பெயர் சூட்டிக்கொண்டிருத்தல் இவ்வம்மையின் மகிமையைக் காட்டுகிறது.

### வசுகோடா எல்லம்மா

திருப்பதிக்கு அருகில் உள்ள சீனிவாசமங்காபுரம் என்னும் கிராமத்தில் இந்த எல்லம்மா உள்ளாள். இவள்

சுகாலிகளின் தேவதையாக இருந்துவருகிறாள். இவள் சக்திவாய்ந்தவள் என்று மக்கள் நம்பிவருகின்றனர்.

சுகாலிகள் வேங்கடவன் தரிசனத்தை முடித்துக் கொண்டு திரும்பும்பொழுது கிராமச் சத்திரத்தில், தங்கினர். அப்பொழுது ஒரு குழந்தை பாம்பு உருவில் சத்திரத்திற்கு அருகில் உள்ள ஒரு புற்றில் நுழைந்து விட்டது. காலை எழுந்தவுடன் அவர்கள் அக் குழந்தையைத் தேடும்பொழுது புற்றில் பாம்பு உருவில் இருந்த குழந்தை தான் தெய்வமாக மாறியதைச் சொல்லி, தனக்குக் கோவில்கட்டி பூசைகள் செய்யுமாறு கட்டளையிட்டது. அவர்களும் அவ்வாறே செய்தனர். அக் கிராமத்திற்கு அது கிராமத் தேவதையாகவும் சுகாலிகளுக்குக் குலதெய்வமாகவும் திகழ்ந்து வருகிறது. இவ்வாறு வசுகோட எல்லம்மா குறித்து ஒரு கதை இவ்விடத்தில் உள்ளது.

**சீராலம்மா**

சந்திரகிரி வட்டத்தில் இருக்கும் பாவாசிகண்டிரிக கிராமத்தில் ஒரு சிறிய குன்றின்மேல் இவ்வம்மா குடி கொண்டிருக்கிறாள். இவளுக்கு எல்லாகுலத்தவரும் விழா செய்கின்றனர். பறையர் அதிகமாக இவ் விழாவில் கலந்து கொள்கின்றனர். எருமையைப் பலி இடுதல் இங்குச் சிறப்பாக நடைபெறுகிறது. மிகவும் மகிமை உள்ள தேவதையாக இவள் இங்கு இருந்து வருகிறாள். கங்கம்மாவிற்குச் செய்வதுபோலவே இவ்வம்மைக்கும் சித்திரை மாதத்தில் திருவிழா செய்கின்றனர்.

சீராலம்மா பயிர்களைக் காத்து மக்களின் நலத்தை நாடும் தேவதையாகத் திகழ்ந்துவருகிறாள். பக்தர்கள் இவளுக்குப் பயபக்தியோடு விரதம் இருப்பர், விரதத்தில்

ஏதேனும் குறை ஏற்பட்டால் சீராலம்மா சீற்றம் கொள்வாள். இவள் குழந்தைப் பேறு அளிக்கும் தெய்வ மாகும். அங்கம்மா, கடுபோதம்மா, சீராலம்மா இம் மூவரும் உடன்பிறந்தோராகக் கருதுகின்றனர். இந்த அம்மாவிற்கு ஊர்வலம் நிகழ்வதில்லை. பலிமுறம் எடுக் கும் வழக்கம் மட்டும் உண்டு. இக் கோவிலின் பூசாரி வண்ணான் ஆவான்.

**பங்காரம்ம**

சித்தூர் ஜில்லா, புத்தூர் தாலுக்காவில் உள்ள கார்வேட்டு நகரம் கிராமத்தில் அரச வம்சத்தாரால் வணங்கப்பட்டு வரும் தேவதை இப் பங்காரம்மா. இவள் கோவிலில் சிலை வடிவில் அமைந்திருக்கின்றாள்.

கார்வேட்டு நகரம் கிராம தேவதைக்கு அவ்வூரைச் சார்ந்த ஒரு அரசன்தான் வேண்டிக்கொண்ட வேண்டுதல் படி தங்கத்தால் ஆன (பங்காரம்) கடையத்தைச் செய்து போட்டதால் அந்தத் தேவதைக்கு 'பங்காரம்மா' என்று பெயர் வந்ததாகக் கூறுவர்.

இந்த அம்மாவிற்கும் கங்கம்மாவிற்குச் செய்வதைப் போலவே ஒவ்வொரு ஆண்டும் திருவிழா செய்கின்றனர்.

**மாதம்ம**

மாதம்மாவிற்கு எல்லம்மா ரேணுகம்ம என்ற பெயர்களும் வழக்கத்தில் உள்ளன. செக்கிலியர்கள் இவளைத் தம் குலதெய்வமாகக் கொண்டுள்ளனர்.

மாதம்மா ஒரு சூலம் வடிவத்தில் உள்ளாள். ஆண்டிற்கு ஒருமுறை இவளுக்குத் திருவிழா செய் கின்றனர்.

### சௌடம்ம

இவள் 'தொகட சூத்திரர்'களின் குலதேவதை. இவள் சாமுண்டி, திரிபுரசுந்தரி, சாமுண்டேஸ்வரி என்ற பெயர்களில் அழைக்கப்படுகிறாள். ஆந்திரா முழுவதும் இவளை இப் பெயர்களில் வணங்கி வருகின்றனர். கிராம தேவதையாகவும் இவள் விளங்குகிறாள்.

### காளியம்மா

அம்மன் கோவில்களில் காளியம்மா கோவில் முக்கிய மானது. பலி இடுதல் இவ்வம்மனுக்குச் சிறப்பாக இடம் பெறுகிறது. காளியைக் கொடிய தெய்வமாகக் கருதுவ தால் எல்லோரும் அவளைத் தொழுகின்றனர். தமிழ் நாட்டுப் பகுதிகளில் இத் தெய்வ வழிபாடு அதிகம். இன்று காளியம்மா வழிபாடு சிறு தெய்வ வழிபாட்டிலிருந்து பெருந்தெய்வ வழிபாடாக மாறி வருகிறது.

### துர்கையம்மா

இவளுக்குப் பலி இடுவதில்லை. ஆனால் கிராம மக்களின் விருப்பங்களை நிறைவேற்றும் தெய்வமாக இவள் விளங்கிவருகிறாள். மகப்பேறு இல்லாதவர்கள் துர்கையை வேண்டி விரதம் இருந்தால் நிச்சயம் மகப்பேறு உண்டாகும் என்பது மக்களின் நம்பிக்கை. இதனால் பிறக்கும் பெண்களுக்குத் துர்கை. துர்கையம்மா என்று பெயரிடுகின்றனர்.

### கன்னிமார் பூசை

சென்னை, சென்னையைச் சார்ந்த இடங்களில் பூசாரிகள் ஏழு கன்னியர் பூசையை நடத்துகின்ற வழக்கம் இன்றும் இருந்துவருகிறது.

அபிராமி, இந்திராணி, கௌமாரி, காளி, நாராயணி, மகேஷ்வரி, வராகி என்பவர்கள் சப்த கன்னியர். இவர்கள் சிவசக்தி வடிவானவர்கள். இவர் களைத் தொழுதால் நோய்நொடி மாயும் என்பது நெடுநாளைய நம்பிக்கை. இவர்களைப் புகழ்ந்தும் நாட்டுப் பாடல்களைப் பாடுவர்.

ஞாயிறு, செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் கன்னிமார் பூசை வீடுகளில் நடைபெறும். அன்று அதிகாலையிலேயே வீட்டில் பதிவிளக்குப் போட்டு வழிபாட்டைத் தொடங்குவார்கள். வீட்டிலேயே பூசாரி கள் காப்புப் பாடல்களைப் பாடுவார்கள். மாலையில்தான் கடற்கரைக்குப் போவார்கள்.

பூசாரிகள் நெற்றியில் பரந்த குங்குமமும், அரையில் சிவப்பு வேட்டியும் அணிந்திருப்பார்கள். அவர்களைப் பின்பற்றி ஆண்களும் பெண்களும் கூட்டம் கூட்டமாய் நடப்பார்கள். அவர்கள் பழம், தேங்காய் முதலிய பூசைக்குரிய பொருள்களை வைத்திருப்பார்கள். இக் கூட்டத்தார் சுவையான எளிய பக்திப் பாடல்களான நாட்டுப்புறப் பாடல்களைப் பாடுவர்.

அப்பொழுது பம்பை ஒலிக்கப்படும். பம்பையையும் பாட்டிசையையும் கேட்ட பிரார்த்தனைக்காரர்கள் தம் வசம் இழந்து நின்று குலுங்குவார்கள்.

குறிப்பிட்ட இடத்திற்கு வந்ததும் வழிபாட்டுக்கு ஆயத்தம் செய்வர். கரும்பாலே கால் நட்டு அரும்பாலே பந்தலிட்டு அதன்கீழ் மணலை ஒன்றுசேர்ந்து ஏழு கன்னியர்களையும் பிள்ளையாரையும் பிடித்துவைப்பார் கள். எதிரே பொங்கலிட்டு அவல், கடலை, சர்க்கரை, தேங்காய் முதலியவற்றைப் படைத்துத் தொழுவார்கள்.

பூசாரிகள் இவ்வாறு பூசை செய்யும் வகையும் தம் பாடல்களில் பாடுவார்கள்.

**மாரியம்ம**

வட ஆற்காடு, செங்கல்பட்டு, சென்னை பகுதிகளில் கிராமத் தேவதையாக மாரியம்மா வணங்கப்படுகிறாள். வெள்ளிதோறும் பூசைகள் செய்வதோடு வேண்டுதல் உள்ளோர் பொங்கலிட்டுக் கோழி, ஆடு ஆகியவற்றையும் இவளுக்குப் பலியிடுகின்றனர்.

ஆடி மாதத்தில் அம்மனைத் திருப்தி செய்வதற்காக ஏழை மக்களுக்குக் கூழ்வார்க்கும் வழக்கமும் உள்ளது. அப்பொழுது கோவில்களிலும், அம்மன் ஊர்வலங்களிலும்,கூழ்வார்க்கும் இல்லங்களிலும் பூசாரிகள் பல பாடல்களைப் பாடுவர். இவை அம்மன் சிறப்புகளைப் போற்றுவதாகவும், மக்களைக் காப்பாற்ற வேண்டுவதாகவும் அமைந்திருக்கும்.

மாரியம்மாவைச் சில இடங்களில் மாகாளியம்மன், ஓங்காளியம்மன், அங்காளம்மன், பத்ரகாளியம்மன் என்றும் வழங்குவர்.

**துளசி**

துளசி தெய்வ நிலையை அடைந்து ஒரு தெய்வமாகக் கொண்டாடப்படுகிறது. வைணவக் கோவில்களில் பக்தர்களுக்குத் தீர்த்தத்துடன் துளசி தரப்படுகிறது. வீடுகளிலும் துளசியை வளர்த்து தெய்வமாகக் கொண்டாடுகின்றனர். துளசியில் இருவகை உண்டு. ஒன்று இராம துளசி மற்றொன்று கிருஷ்ண துளசி. இராம துளசி பச்சை நிறமாகவும் கிருஷ்ணதுளசி கரும்பச்சை நிறமாகவும் இருக்கும்.

வீடுகளில் பெரும்பான்மையோர் இராமதுளசியையே வணங்குகின்றனர். வீட்டின் பிற்பகுதியில் கிணற்றருகில் சிறிய மாடம் கட்டி, துளசியை நட்டு வளர்த்து மிகத் தூய்மையோடு வழிபாடு செய்வர்.

துளசி, நுரையீரல், தொண்டைக் கோளாறுகளைப் போக்கும் ஒரு சிறந்த மருந்தாக விளங்குகிறது என்று நாட்டு மருத்துவர்மூலம் அறியலாம். இக் காரணத்தால் நாளடைவில் துளசி தெய்வ நிலைக்கு உயர்ந்ததாகக் கொள்ளவேண்டும்.

இறந்த மனிதரையும் தெய்வ நிலைக்கு உயர்த்தி சமாதி கட்டி வணங்குவதும் எல்லா இடங்களிலும் வழக்க மாக உள்ளது.

# விளக்குக் கேள்வி

'விளக்குக் கேள்வி' என்பது குறி கேட்கும் நிகழ்ச்சி. ஒரு காரியத்தைத் தொடங்குவதற்குமுன் அது நன்மை தருமா? தீமை தருமா? என்று அறிந்துகொள்ள நினைப்பது மனித இயல்பு. அதற்காக அமைந்ததே விளக்குக் கேள்வி. இதையும் கிராம மக்கள் மிகப் புனித மாக மேற்கொள்கின்றனர்.

குறிகேட்பவர், பல நாட்களுக்கு முன்னதாகவே பூசாரியைச் சந்தித்து அவர்கூறும் நிபந்தனைகளுக்கு உட்பட வேண்டும். அதாவது பூசைக்கு முன்பு மூன்று நாட்கள் குறி கேட்போரும் பூசாரியும் விரதம் இருக்க வேண்டும்.

குறிப்பிட்ட நாள் அந்திநேரத்தில் வழிபாட்டுக்குரிய காரியங்கள் ஆரம்பமாகும். வீட்டுக் கூடத்தை மெழுகி, கோலமிட்டு மாவிலைத் தோரணங்கள் கட்டுவார்கள். பூமாலைகளையும் தொங்கவிட்டு அழகுபடுத்துவர். கூடத்தின் நடுவில் உயரமான ஒரு பீடத்தில் செம் பைக் கவிழ்த்துச் சாணிவைத்து அதன்மேல் ஒற்றைத் திரி யுள்ள ஒரு விளக்கை ஏற்றுவார்கள். அதற்குக் காமாட்சி விளக்கு என்று பெயர். அதன் இருபுறமும் வேலும் வாளும் நிறுத்துவார்கள். சுமார் 10 மணியளவில் பம்பை, உடுக்கை முழக்கமோடு விளக்கை ஏற்றுவார்கள். பூசாரிகள் பாடல் களைப் பக்தியோடு பாடுவர். குறி கேட்பவர் அமைதி யாக உட்கார்ந்திருப்பர். விளக்குத் திரி நேராக எரிந்து கொண்டிருக்கும். குறிப்பிட்ட நேரத்தில் திரி அசைந்து

ஆடினால் நினைத்த காரியம் நிறைவேறும். திரி அசைய வில்லை என்றால் தீமை உண்டாகும் என்று நம்பிக்கை.

இவ் வழக்கம் சென்னை அதன் சுற்றுப்புறங்களில் இருந்துவருகிறது. சித்தூர் மாவட்டத்திலும் இவ் வழக்கத்தை ஒரு சில இடங்களில் காணலாம்.

### ஆண் தெய்வங்கள்

பெரும்பான்மையாகக் கிராமத் தெய்வங்களில் ஆண் தெய்வங்களைவிடப் பெண் தெய்வங்களே அதிகம். ஆண் தெய்வங்களையும் கிராமமக்கள் வணங்குகின்றனர். அவை வருமாறு :

### போதுராஜு

அக்க தேவதைகளின் உடன்பிறந்தோராகவும் சிறந்த சைவ பக்தராகவும் நாட்டுப்புற மக்களால் துதிக்கப்பட்டு வருகிறார். பார்வதி தேவியின் பிள்ளை என்றும் பாரதக் கதையில் 'பாண்டவர்களுக்கு அரண்மனைக் காவலுக் காகப் படைக்கப்பட்டவர் என்றும் செய்திகள் உள்ளன.

இவர் உருவத்தைப் பற்றி ஒரு செய்தி உள்ளது. இவரால் பல இன்னல்கள் பட்ட தேவதைகள் கண்ணனை அடைந்து முறையிடுகின்றனர். கண்ணன் பெண்வேடம் அணிந்துகொண்டு போதுராஜு எதிரில் செல்கிறான். அவள் அழகில் மயங்கிய போதுராஜு அவள் கோரிக்கைப் படி திருமணம் செய்துகொள்ள தன் தாய் தந்தையரின் தலைகளை வெட்டுகிறான். அவன் தன் வலது கையில் ஒரு தலையையும் முழங்காலில் ஒரு தலையையும் கொண்டு இடதுகையில் வெட்டின கத்தியோடு காட்சி தருகிறான். இக் காட்சியைக் கண்ட மாயப் பெண்

'என்னையும் இவ்வாறே வெட்டி விடுவாய்' என்றுசொல்லி மறைந்துவிடுகிறாள். இதனால் கோபம் கொண்ட போதுராஜு தான் வந்த தோற்றத்தோடு நின்று விடுகிறான். இன்றும் இத் தோற்றத்தில்தான் இத் தெய்வம் உள்ளது. பாண்டவர்களுக்கு நடைபெறும் பூசை இவருக்கும் நடைபெறுகிறது.

### தருமர், அனுமார்

இவர்களையும் கிராமமக்கள் கிராமத் தெய்வங்களை வழிபடுவது போன்று வழிபடுகின்றனர். பல கிராமங் களில் இவர்களுக்குத் தனித்தனி கோவில்கள் இருக் கின்றன. கிராமத்தெய்வங்களுக்குக் கொடுக்கும் உயிர்ப் பலி இவர்களுக்குத் தருவதில்லை. இவர்களை வேதக் கடவுளர் நெறியில் வழிபடுகின்றனர்.

### பிள்ளையார்

கிராமமக்களால் பிள்ளையார் தெய்வம் கிராமத் தெய்வநிலையில் வணங்கப்பட்டும் திருவிழா கொண்டா டப்பட்டும் வருகிறது. செய்யும் தொழிலில் வெற்றியை நாடி, பிள்ளையார் வணக்கத்தைச் செய்கின்ற பண்பாடு கிராமமக்களிடையே மட்டுமன்றி இலக்கியங்களில் கூட பார்க்கிறோம். வியாபாரிகள் புதுக்கணக்கு எழுதும் போதும் பிள்ளையாருக்குச் சுழி போட்டப் பின்னரே தொடங்குவர். ஆக, பிள்ளையாரை வணங்கித் தொடங்கும் எச் செயலும் இனிதேமுடியும் என்பது மக்கள் நம்பிக்கை. கிராம, நகர மக்கள் ஆண்டுதோறும் விநாயகர் சதுர்த்தி கொண்டாடுகின்றனர். அவருக்குப் பிடித்தமான அவல், பொரி, கடலை, கொழுக்கட்டை, கரும்பு, எள்ளுருண்டை முதலியன படைத்துக்

கொண்டாடுவர். பெரும்பாலும் ஒவ்வொரு கிராமத்திலும் ஊரின் முன்னேயே பிள்ளையார் கோவில் அமைந்திருக்கும். ஆந்திரத்தில் பிள்ளையாரை விக்கினேஸ்வர் என்றழைத்துக் கொண்டாடுகின்றனர்.

கிராமமக்கள் இவ்வாறு கிராமத் தெய்வங்களை தொழுத்வதோடு வேதநெறித் தெய்வங்களாகக் கருதப் படும் திருமால், சிவன், முருகன் ஆகியோரையும்கூட வணங்கி வருகின்றனர். முருகனைப் பெரும்பான்மையான தமிழகத்துக் கிராம மக்கள் தம் இனத் தெய்வமாகக் கொண்டாடுகின்றனர். இக் கடவுளையும் கிராமத் தெய்வம் என்று கொள்ளும் அளவிற்குக் கிராமங்களில் முருகன் வழிபாடு இடம்பெற்றுள்ளது.

சித்தூர் மாவட்டத்தில் முருகன் சுப்பிரமணிசாமி என்ற பெயரில் அழைக்கப்படுகிறான். தமிழகத்துப் பண்பாட்டு முறையிலேயே இம் மாவட்டத்திலும் முருகனுக்குக் காவடி எடுத்தும் காவடியின்போது காவடிப் பாடல்களைப் பாடியும் கிருத்திகைகளை முருகன் நாட்களாகக் கொண்டும் வணங்கிவருகின்றனர்.

காட்டமராஜு (காட்டேறு)

கிராமத்தின் புறவெளியில் கல்லுருவில் இத் தெய்வத்தை உண்டாக்கிக் கொண்டாடுகின்றனர். இத் தெய்வம் கிராமமக்களை, சிறப்பாகக் கிராமத்தில் உள்ள ஆடுமாடுகளை யாதொரு குறையுமின்றிக் காத்து வருவதாக மக்கள் நம்புகின்றனர். இத் தெய்வத்திற்கு நிலையான கோவில் இல்லை. பல இடங்களில் ஏதேனும் ஒரு மரத்தின்கீழ் கல்லால் இவ்வுருவத்தை வணங்கும் வழக்கம் இருந்துவருகிறது. இம் மக்கள் இதைக் காட்டேறு என்ற பெயராலும் வணங்குகின்றனர்.

இத் தெய்வம் கிராமத் தெய்வமாயினும் ஒரு குறிப்பிட்ட குலத்தாரின் குலத்தெய்வமாக இருந்து வருகிறது. மற்றவர்கள் இதை வழிபடுவதில்லை.

**முனீஸ்வரன்**

இந்தத் தெய்வத்திற்கும் குரப்பசாமிக்குச் செய்வது போல் பூசைகள் செய்து வருகிறார்கள். இதுவும் சிறப்பான குலதெய்வமாய்த் திகழ்ந்துவருகிறது. இத் தெய்வத்தின் அருளால் பிறக்கும் குழந்தைகளுக்கு இத் தெய்வத்தின் பெயரையே பெயராய்ச் சூட்டுகின்றனர்.

**வீரன்ன**

இத் தெய்வம் அரிச்சந்திர புராணத்தில் வரும் சுடுகாட்டுத் தெய்வம் இன்றும் இப் பக்கத்து கிராம மக்கள் இத் தெய்வத்தைச் சுடுகாட்டுத் தெய்வமாகக் கொண்டுள்ளனர். ஒரு பாறையில் இத் தெய்வம் செதுக்கப்பட்டிருக்கும். ஊருக்கு வெளியில் சுடுகாட்டில் இருந்தபடி ஊர்மக்களுக்குப் பேய் பிசாசுகளால் எந்தத் துன்பமும் வராதபடி இத் தெய்வம் காத்துவருகிறது. பிணத்தைச் சுடுகாட்டிற்குக் கொண்டு போகும்போது இத் தெய்வத்தை வணங்குவர்.

**கருப்பசாமி**

இத் தெய்வம் கிராமத்தெய்வமானாலும் முக்கியமாய்ச் சிலரின் குலதெய்வமாய்த் திகழ்கிறது. இத் தெய்வத்திற்குக் கோவில் இல்லை. ஊருக்கு வெளியில் பயிர் செய்யும் நிலங்களிலோ தோட்டங்களிலோ அரசமரம் வேப்பமரம் முதலியவற்றின் கீழோ கல் உருவில் இத் தெய்வம் வணங்கப்படுகிறது.

குழந்தைப் பேற்றுக்காக இத் தெய்வத்திற்கு வெள்ளிக்கிழமையன்று பொங்கலிட்டு வணங்குவர். தெய்வத்தின் அருளால் மக்கட்பேறு கிட்டும் என்று கருதுகின்றனர். அவ்வாறு பிறக்கும் குழந்தைகளுக்கும் இத் தெய்வத்தின் பெயரையே இடுகின்றனர்,

**தருமர் திருநாள்**

ஆந்திராவில் உள்ள சித்தூர், நெல்லூர் மாவட்டங்களிலும், தமிழ்நாட்டைச் சார்ந்த வடஆற்காடு, செங்கல்பட்டு, சென்னைப் பகுதிகளிலும், பிற இடங்களிலும் பாரதம் சொல்லுதலும் தருமர் விழாவும் சிறப்பாகச் செய்யப்படுகின்றன. சித்தூர் மாவட்டத்தில் கங்கம்மா விழாவிற்கு அடுத்துச் சிறப்பாக இவ் விழா நடத்தப்படுகிறது. இவ் விழா ஒவ்வொரு வருடமும் மே மாதத்திலிருந்து ஜூலை மாதத்திற்குள் நடைபெறுகிறது. இவ் விழா பாரதத் திருவிழா திரௌபதி திருநாள், நெருப்பு மிதி திருவிழா முதலிய பெயர்களில் வழங்கப்படுகிறது. தமிழர் பண்பாடும், தெலுங்கர் பண்பாடும் இணைந்த வகையில் இவ் விழா கொண்டாடப் படுகிறது.

பாரதக் கதையைச் சொல்லித் தருமர் விழா செய்தால் மழை பொழியும் என்ற நம்பிக்கை கிராம மக்களிடையே அன்றும் இன்றும் இருந்து வருகிறது. மழை பொழிவதோடு ஊருக்கு எந்தக் குறையும் வராமல் நல்லது நடக்கும் என்றும் அவர்கள் கருதுகின்றனர். ஒவ்வொரு ஆண்டும் மழைக்காலத்திற்கு முன்பே ஜூன், ஜூலை மாதத்தில் இவ் விழா நடத்தப்படுவதின் நோக்கம்

இதுவே ஆகும். பாரதத்தில் வரும் கதை மாந்தர்களை மக்கள் கடவுள் நிலை மனிதர்களாகக் கருதுகின்றனர்.

இவ் விழாவை ஒட்டி ஒரு கதை வழக்கத்தில் உள்ளது. பாண்டவர்களின் மரணத்திற்குப் பிறகு துவாபர யுகத்தில் அப் பகுதியில் வறுமை அதிகமாயிற்று. மழை பொழியவில்லை; பயிர்கள் செழிக்கவில்லை. உண்ண உணவின்றியும் உடுக்க உடையின்றியும் மக்கள் துன்புற்றனர். பகைவர்களின் தொல்லைகளும் அதிகமாயிற்று.

இந்நிலையில் வியாசமுனிவரை நாடித் தம் தொல்லைகளிலிருந்து விடுபடுவதற்கு வழி வேண்டினர். வியாசரும் அவர்களுக்குத் தக்க வழியைச் சொன்னார். அதாவது உங்கள் முன்னோர்கள் பாண்டவர்களும் திரௌபதியும் ஆவர்; சக்தி வாய்ந்தவர்கள். அவர்களின் அன்பும் அருளும் எங்கு உண்டோ அங்கு எந்தக் குறையும் இருக்காது. ஆகவே நீங்கள் பாண்டவர்கள், திரௌபதி பெயர்களில் விழா கொண்டாடவேண்டும். விழா நடத்துவதற்குமுன்பு பாண்டவர்கள் கதையைப் பலரும் அறியச் சொல்லவேண்டும். இவ்வாறு செய்தால் எக் குறையும் இன்றி நீங்கள் வளமாக இருக்கலாம் என்று அவர் கூறினார். மக்களும் அவ்வாறு செய்தனர்; நாட்டில் மழை பொழிந்தது; மக்கள் எத் துன்பமும் இன்றி நலமாய் வாழ்ந்தனர்.

எனவே அன்றிலிருந்து மக்கள் ஒவ்வொரு ஆண்டும் இவ் விழாவை நடத்திவருகின்றனர். பெரும்பாலும் பாரதம் விழா 18 நாட்கள் நடக்கும். இதற்கு மகாபாரதம் 18 பருவங்களைக் கொண்டிருத்தலும், 18 நாட்கள் பாரதப்போர் நிகழ்ந்ததும் காரணங்களாகலாம்.

## பாரதக் கதையைச் சொல்லுதல்

பாரதம் நன்கு கற்ற புராண ஞானம் படைத்த இருவர் கதையைச் சொல்வர். இருவரில் ஒருவர் பாடலை இசையோடு பாடுவார். மற்றவர் பாடலை விளக்கிக் கதையைத் தொடர்ந்து சொல்லுவார். இடையிடையே குட்டிக் கதைகளைச் சொல்லி மக்களை உற்சாகப்படுத்துவர். ஆந்திராவில் குட்டிக் கதைகளை பிட்டக் கதைகள் என்று சொல்லுவர். கதையைச் சொல்வதற்காக ஊருக்கு வெளியிலேயோ ஊர் உள்ளேயோ, ஜூன், ஜுலை மாதங்களில் வசதியான இடத்தில் தென்னங்கீற்றுக்களால் பெரிய கொட்டகையை இடுவர். ஊரில் தருமர் கோவில் இருந்தால் அக் கோவில் முன்பும் கதையைச் சொல்வார்கள். ஒவ்வொரு நாளும் பிற்பகல் இரண்டு மணியளவிலிருந்து மாலை ஐந்துமணி யளவில் கதை சொல்லுதல் நடைபெறும். கதையை 18 நாட்களுக்குக் குறையாமல் சொல்லுவர். சில இடங்களில் இரண்டு மாதங்களாய்கூடச் சொல்லுவர். வெயிலில் வீணாகத் தூங்குவதை விட்டு மக்கள் ஆர்வமாகக் கதையைக் கேட்க வருவர். இச் செலவுகளுக்காக ஒவ்வொரு வீட்டிலும் ஒரு குறிப்பிட்ட தொகைப் பணத்தை வசூலிப்பர்.

## விழா நடத்துதல்

ஒரு நல்ல நாளில் பாரத விழாவை நடத்த முன்னிட்டுக் கொடி ஏற்றுவர். இக் கொடி மஞ்சள் நிறத்தில் இருக்கும். கொடி ஏற்றியபிறகு அவ்வூர்ப் பெரியவர்களுள் சிலர் கைக்குக் கங்கணம் கட்டிக்கொள்வர். இக் கங்கணம் கட்டிக்கொண்டவர்கள் பதினெட்டு நாட்களிலும் விழா நடவடிக்கைகளில் ஈடுபட்டு முன்னின்று நடத்திவைப்பர்.

இவர்கள் அந் நாட்களில் மிகவும் தூய்மையாய் விரதம் இருப்பர்.

தருமர் அல்லது திரௌபதி கோவில் முன்பு நெருப்பை மூட்டுவர். இந் நெருப்பை 18 நாட்கள் வரையும் அணையாமல் காத்துவருவர்.

இரவில் பாரதக் கதைத் தொடர்பான நாடகம் நடத்தப்படும்; சில இடங்களில் 18 நாட்களும் நடக்கும். இந் நாடகம் கண்ணுக்கு விருந்தாகவும் காதுக்கு இனிமையாகவும் அமைந்திருக்கும்.

### நாடகம் நடக்கும் முறை

நாடகம் கோவில் முன்போ, மக்கள் வசதியாக அமர்ந்து காணத்தக்க இடத்திலோ நடத்தப்படும். சுற்றுப்புறங்களில் நாடகம் எப்பொழுது நடத்தப்படும் என்பது குறித்துப் பறைசாற்றுவர். இரவு 10 மணியளவில் நாடகம் தொடங்கப்படும்.

நாடகத்தைத் தொடங்குவதற்கு முன்பு வழிபாடு செய்தல் உண்டு. நாடகத்தில் பங்கு பெறுவோர் திரைக்குப் பின்னால் விநாயகர் சிலை முன்பு குழுமி நிற்பர். திரையை விலக்கியதும் விநாயகருக்குக் கற்பூரம் ஏற்றித் தேங்காய் உடைத்து வழிபடுவர். தாம் மேற்கொண்ட செயல் நன்கு நடைபெற வேண்டும் என்று வேண்டிக் கொள்வர். பிறகு பிரமன், திருமால், சிவன், பார்வதி, இலட்சுமி முதலிய தெய்வங்களையும் வணங்குவர். இறுதியில் தம் குருவைத் துதிப்பர்.

குருவைத் துதித்ததும் நாடக மேடையில் வலமாய் வந்து மற்ற தேவதைகளைக் கொப்பிப் பாடல் பாடித் துதிப்பர். பிறகு ஒரு பாடலில் பாரதக் கதையின்

சுருக்கத்தைப் பாடி அக் கதையை நடிக்கப் போவதாகக் கூறுவர்.

பாரதக் கதையை 18 நாட்கள்வரை சொல்லுவர். பெரும்பான்மையாக ஒன்பதாவது நாளிலிருந்து நாடகம் நடைபெறும். இரவில் நாடகமாய் நடிக்கப்படும் கதையைப் பகலில் ஹரிகதையாய்ச் சொல்லிவிடுவர். ஒன்பதாவது நாள் இரவில் பெரும்பான்மையான கிராமங் களில் கண்ணன் விளையாட்டுக்களை (கிருஷ்ணன் லீலைகள்) நாடகமாக நடிப்பர். பத்தாவது நாளில் பாண்டு அரசன் 'கொலுவிருத்தல்' பகுதியை நடிப்பர். பதினோராவது நாளில் பகாசூரன் வதைப் பகுதி காட்டப் படும். பீமன் வேடத்தை அணிபவன் பகலில் பலநிற வண்ணக் காகிதங்களால் வண்டிக்கு இரண்டு எருமை களைப் பூட்டி ஓடச் செய்து அந்தக் கிராமத்தின் ஒவ்வொரு வீட்டிற்கும் சென்று சோற்றையும் காய்கறியை யும் சேகரித்து வண்டியில் இருக்கும் கூடையில் நிரப்பிக் கொள்வான். பிறகு வண்டியை ஊருக்கு வெளியே ஓட்டிச் சென்று அங்குப் பகாசூரன் வேடத்தில் இருப்பவனைக் கொல்லுவதாக நடிப்பான். இறுதியில் கூடையில் இருக்கும் சோற்றையும் காய்கறிகளையும் மகிழ்ச்சியாய் மக்களுக்குப் பகிர்ந்து அளிப்பான். இத்துடன் பகல் நிகழ்ச்சி முற்றுபெறும். இரவில் பகாசூரன் வதை நாடக மாக நடிக்கப்படும்.

பன்னிரண்டாம் நாள் இரவில் 'திரௌபதித் திருமணப்'பகுதியை நடிப்பர். பதின்மூன்றாம் நாளில் 'தருமர் சூது' நடிக்கப்படும். இதை மக்கள் மிகவும் விரும்பிப் பார்ப்பர். திரௌபதியை மானபங்கம் செய்யும் நிகழ்ச்சியும் இதில் இடம்பெறும். பதினான்காம் நாள் இரவில் ரம்பா விஜயர்களை அழித்தல்

நிகழ்ச்சி நடைபெறும். அன்றையப் பகலில் மிகவும் சிறப்பாக அர்ஜுனன் தவம் செய்யும் செயல் நடைபெறும். அர்ஜுனன் தவம் வெள்ளிக்கிழமை வருமாறு விழாவை வைத்துக்கொள்வர். வெள்ளிக்கிழமை காலை 10 மணியளவில் தொடங்கி 12 மணியளவில் இந்நிகழ்ச்சி நடைபெறும்.

அர்ஜுனன் பாசுபதத்திற்காக மிகவும் உயரமான இந்திரகிரி மலைமேல் தவம் செய்ததாகப் புராணம் கூறுகிறது. கிராம மக்கள் மலைக்குப் பதிலாக உயரமான பனை மரத்தை நடுவர். அதற்கு 21 மேக்குகள் (இடைக்குச்சிகள்) அடித்திருப்பர். அம் மரத்தைப் பலவாறு அலங்காரம் செய்திருப்பர். அதற்குத் 'தவமரம்' என்று பெயர். அதன் உச்சியில் உட்கார்ந்து அர்ஜுனன் தவம் செய்வான். சிவபெருமான் அவன் தவத்தை மெச்சி அவனுக்குப் பாசுபதத்தைத் தருவதாகவும் அதைப் பெற்று அவன் வருவதாகவும் மக்கள் கூறுவர். அர்ஜுனன் கீழே இறங்கி வருவதற்கு முன்பு தன்னுடன் கொண்டு சென்ற—மஞ்சள் துணியில் கட்டி வைத்துள்ள பூ, வாழை, கொய்யா, எலுமிச்சை முதலியவற்றை மரத்திலிருந்து கீழே கொட்டுவான். அவற்றை மகப்பேற்றுக்காக விரதம் மேற்கொண்டு அங்கு வந்துள்ள பெண்கள் பிரசாதமாக எடுத்துக்கொள்வர். அவற்றுள் வாழை கிடைத்தால் ஆண்மகவு பிறப்பதாகவும் கொய்யா கிடைத்தால் பெண்மகவு பிறப்பதாகவும் பெண்களுக்கு நம்பிக்கை உண்டு. பதினைந்தாம் நாள் பகலில் கதை சொல்லுதல் மட்டும் நடக்கும், வேறு எதுவும் இருக்காது. இரவில் கண்ணன் கயனுக்குச் சாபம் கொடுத்தல், அர்ஜுனன் கயனுக்கு அபயம் அளித்தல், கண்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் போர் நடத்தல் என்னும் நிகழ்ச்சிகள் நாடகமாய் நடிக்கப்படும்,

பதினாறாம் நாள் 'கீச்சகன் வதை' பகலில் கதையாகவும் இரவில் நாடகமாகவும் நடைபெறும்.

பதினேழாம் நாள் நடைபெறும் நிகழ்ச்சிகள் மிகவும் சிறப்பாக இருக்கும். அன்று கண்ணன் தூது, அலுகு நிறுத்தல், யுத்தபலி, குருச்சேத்திரப் போர், கர்ணன் மரணம் முதலிய நிகழ்ச்சிகள் நடைபெறும். இந் நிகழ்ச்சிகள் பகலில் கதையாகவும் இரவில் நாடகமாகவும் நடைபெறும்.

'அலுகு நிறுத்தல்' என்பது நடக்கவிருக்கும் போர்க் காட்சி நல்லதாய் அமைவதற்குச் செய்யும் பூசையாகும். அதாவது குடத்தின்மேல் ஒரு கத்தியைச் செங்குத்தாக நிறுத்துவார்கள். கத்தியை நிறுத்தியபிறகு குடம் விழாமல் நின்றால் கத்தி யுத்தத்திற்கு எந்தக் குறையும் இல்லை என்றும் குடம் விழுந்துவிட்டால் குறை ஏற்படும் என்றும் அவர்கள் நம்பிக்கை. குடம் விழுந்துவிட்டால் குறை நிவர்த்திக்காகச் சாந்தியைச் செய்து யுத்தத்தைத் துவங்குவர்.

மற்றும் இரவில் நாடகத்தில் யுத்தத்தைத் துவங்குவதற்கு முன்பு பலி கொடுத்தலும் நடைபெறுவதுண்டு. மண்ணால் ஏறக்குறைய பத்து அடி உயரமுள்ள 'கதை ராமன்' என்று சொல்லப்படும் உருவத்தை (வெள்ளாடு உருவத்தைப்போல் இருக்கும்) செய்து அதைப் பலியாகக் கொடுத்துவிட்டு நாடகத்தை நடத்துவர்.

பதினெட்டாம் நாளில் துச்சாதனன், துரியோதனன் வதை நிகழ்ச்சி நடைபெறும். காலை 9 மணி அளவிலிருந்து நண்பகல்வரை இந் நிகழ்ச்சியை நாடகமாய் நடத்துவார்கள்,

பிற்பகல் 2 மணியிலிருந்து இந் நிகழ்ச்சியைக் கதையாகச் சொல்லுவார்கள். மாலை 5 மணியளவில் தீ மிதித்தல் நிகழ்ச்சி நடைபெறும். இரவில் பாரதக் கதையல்லாத சத்திய அரிச்சந்திரன், பாலநாகம்மா, சாரங்கதார சரித்திரம் முதலான கதைகளில் ஒன்றை நாடகமாய் நடத்துவர்.

**துரியோதனன், துச்சாதனன் வதை நிகழ்ச்சி :**

தருமர் கோவில் முன்பு ஏறக்குறைய 10 அடி நீளத்திலும் ஒரு அடி உயரத்திலும் துரியோதனன், துச்சாதனன் உருவங்களைப் படுத்திருக்கும் வடிவத்தில் மண்ணால் செய்வார்கள். ஒரு சிறிய மட்குடத்தில் இரத்த நிறமுள்ள தண்ணீரை நிரப்பி அதைத் துரியோதனன் உருவத்தின் துடைப் பகுதியில் தெரியாமல் புதைத்து வைப்பார்கள். பீமனும் துரியோதனனும் இப் பக்கமும் அப் பக்கமும் திரிந்தபடி ஆவேசமாய்க் கதை யுத்தம் செய்வார்கள். இறுதியாக பீமன் தனது கதையால் மண்ணால் செய்துள்ள துரியோதனன் துடைப் பகுதியில் அடிப்பான். அப்பொழுது அங்குப் புதைத்து வைத்திருக்கும் மண்குடம் உடைந்து செந்நிற நீர் ரத்தம் போன்று பீறிட்டு எழும். இத்துடன் துரியோதனன் வதை முடிந்துவிடும்.

# முடிவுரை

கி.பி. 1376லிருந்து கி.பி. 1565 வரை ஏறக்குறைய 250 ஆண்டுகள் தென்னிந்தியா முழுவதும் விஜய நகர ஆட்சியின் கீழ் இருந்ததாக வரலாற்றுச் செய்திகள் கூறுகின்றன. அதன் பிறகு முகம்மதியர்கள் ஆட்சி நிலவலாயிற்று. இதனால் ஓர் ஆட்சியின் கீழ் வாழ்ந்த தென்னிந்திய மக்களிடையே பண்பாட்டு நெறிமுறை களில் ஒற்றுமை இடங்கொண்டது. இந்த அடிப்படையில் தான் கிராம தேவதைகளைத் தொழும் முறைகளிலும் நோக்கங்களிலும் பயன்களிலும் தென்னிந்திய நாட்டு மக்களிடையே பெரும்பான்மையாய் ஒற்றுமை காணப்படு கிறது. அதோடு பெரும்பான்மையாக கிராம தேவதை களை வழிபடும் முறைகளில் வெளியார் நாகரிகம் தென்னகத்தில் இடங்கொடுக்கவில்லை.

சித்தூர் மாவட்ட நாட்டுப்புற மக்களின் சமய நிலையை ஒன்று—சித்தாந்த முறை (Theory) இரண்டு—செயல்முறை (Practice) ஆகிய இரண்டில் செயல்முறை பெரிதும் வழக்கத்தில் இருந்துவருகின்றது. தெய்வத்தை வழிபடும் பல நெறிமுறைகள் இந்தச் செயல்முறையில் அடங்கும். இந்தச் செயல் முறைக்கு ஆதிமனிதனிடத்து அமைந்த அச்சமும், நன்றியறி உணர்வும் காரணங் களாய்த் திகழ்ந்துள்ளன.

இவர்களின் தெய்வ வழிபாட்டை 1. வீட்டுத் தெய்வ வழிபாடு 2. குலத்தெய்வ வழிபாடு 3. ஊர்த்தெய்வ வழிபாடு என்னும் முந்நெறிகளில் அடக்கலாம். இம்

முந்நெறிகளும் மனிதனைத் தெய்வத்தோடு தொடர்பு படுத்தும் ஒருமை நோக்கை கொண்டு திகழ்ந்தன.

இப்பகுதி கிராமத் தேவதைகளில் கங்கம்மா முதலிடம் பெற்றுவருகிறது. மற்ற தெய்வங்களுக்கும் அந்தந்தப் பகுதியில் பயபக்தியோடு வழிபாடுகளை நாட்டுப்புற மக்கள் செய்துவருகின்றனர்.

பெரும்பான்மையான கிராம தெய்வங்களுக்கு உயிர்ப் பலிக் கொடுத்தல் இயல்பாய் அமைந்துள்ளது. வேதக் கடவுளர்களாகிய சிவன், விஷ்ணு வழிபாட்டு முறைகளில் இந்த ஒரு பழக்கத்தைக் காணவில்லை.

கிராமத் தேவதைகளுக்குச் செய்யும் வழிபாட்டு முறைகள் நாட்டுப்புற மக்களுக்குத் தெய்வத்தொடர்பு கொடுத்தலோடு அந்தச் செயல்முறைகள் அவர்களுக்கு உடல், உள்ள—இன்பத்தையும் கொடுக்க இயல்பாய் இருந்தன. அதோடு அவர்களுள் இருக்கும் மனவேறு பாட்டை நீக்கி உறவையும் நட்பையும் வளர்க்கவும் இவ் வழிபாட்டு முறைகள் துணைபுரிந்தன. சமய வேறு பாட்டையும் காணா மனப்பக்குவத்தைக் கொடுக்கலாயின.

நாட்டுப்புற மக்களில் பலர் காரணம் தெரியாமலே தெய்வ வழிபாட்டைச் செய்து வருகின்றனர் என்றாலும் குறைகளற்ற தூய மனங்கொண்ட ஓர் நிலையை வேண்டித் தெய்வங்களுக்கும் குற்றமற்ற சினந்தணிந்த அன்பு கலந்த மனத்தோடு ஆராதனை செய்தல் அவர்களுடைய பொதுப்படையான நோக்கமாக இருந்தது.

கிராமத் தேவதைகளின் பூசாரிகள் பிராமணர்களே இருக்கவேண்டிய அவசியம் இல்லாமல் இருந்தது. சிறப்பாக இடையர்களும் வண்ணாரும் நாட்டுப்புறத் தெய்வங்களின் பூசாரிகளாகத் திகழ்ந்தனர். ஆனால்

திருமால், சிவன் முதலிய பெரும் தெய்வங்களின் பூசாரிகள் பிராமணர்களாகவே இருந்தனர்.

கிராமத் தெய்வங்களுக்குக் கன்னிகளைவிடும் பழக்கம் இப் பகுதியில் இல்லை.

இப் பகுதி கிராமங்கள் கிராமத்தெய்வ வழிபாட்டோடு பெருந் தெய்வங்கள் வழிபாட்டையும் மேற்கொண்டு வருகிறார்கள். கிராமத் தெய்வங்களிலும் பெண் தெய்வ வழிபாடு மிகுதியாக உள்ளது.

கிராமத் தெய்வங்கள் வழிபாட்டால் பெறப்படுகின்ற பயன்கள் பல; ஆயினும் உயிர்ப்பலி இடுதல் தெய்வங்களுக்குக் கன்னிகைகளை இடுதல் ஐதீகம் செய்தல் போன்ற (ஐதீகம் என்பது-கிராமத்திற்கு தீமை வந்தால் தீமையைத் நீக்க திருமணம் ஆகாத கன்னிப் பெண்ணை உடம்பில் துணியின்றி நிர்வாணமாய் ஊரை மூன்று முறை கையில் தீவட்டியோடு வலம் வரச்செய்தல் ஆகும்). ஒரு சில மூடப்பழக்கங்கள் கிராம மக்களிடையே இன்றும் இருந்துவருகின்றன. வருங்காலம் இத்தகைய மூடநெறிகளுக்கு முற்றுப்புள்ளி வைக்க இடம் கொடுக்கவேண்டும்.

## தெலுங்கு நாட்டுப்புற இலக்கியத்தில் தெய்வப்பாடல்கள் ஓர் அறிமுகம்

மானிடன் இன்பத்தானும், துன்பத்தானும் தோன்றும் தன் எண்ண எழுச்சிகளை என்று சமுதாயத்திற்குச் சொல்லத் தொடங்கினானோ அன்றே அவனிடத்து மொழியும் மொழியோடு பாடலும் தோன்றியது. வரிவடிவற்று வாய்மொழி நிலையில் கிராமப்புறங்களில் தொன்றுதொட்டு வழங்கிவரும் பாடல்களே வாய்மொழி இலக்கியம் அல்லது நாட்டுப்புற இலக்கியம் என்று வழங்கலாயிற்று. ஆக நாட்டுப்புற மக்களின் ஆசாபாசங்களையும் அவலக்கவலைகளையும் எண்ண எழுச்சிகளையும் புலப்படுத்தும் வாழ்வு இலக்கியம் நாட்டுப்புற இலக்கியமாகும்.

இந்த நாட்டுப்புறப் பாடல்களில் தெய்வத்தொடர்பான பாடல்கள் முதலில் தோன்றியிருக்கலாம். மானிடன் இன்ப உணர்விலும் துன்ப உணர்வில் தன் உணர்வுகளைப் பிறர்க்கு வெளிப்படுத்தலானான். அதோடு அத் துன்பங்களைத் துடைப்பதற்கும் ஒரு வழியையும் தேடலானான். ஆதி நிலையில் இயற்கையின் தத்துவத்தை (இரகசியத்தை) அறியாத அவன் தன்னினும் உயர்ந்த இயற்கையை வயப்படுத்திக் கொண்டு அதனைத் தன் துன்பத்தைத் துடைக்கும் வாயிலாகக் கருதினான். இவ் வகையில் ஆதிநிலையில் தெய்வப் பாடல்கள் தோன்றியதோடு அவனிடத்து ''அவனின்றி ஓரணுவும் அசையாது'' என்ற நம்பிக்கையும் நிலைக்கலாயிற்று.

இந் நம்பிக்கை அடிப்படையில் எழுந்த ஆந்திர நாட்டுப்புறத் தெய்வப் பாடல்களை அறிமுகப்படுத்தும் நோக்கில் இக் கட்டுரை அமைகிறது.

தெலுங்கு நாட்டுப்புறத் தெய்வப் பாடல்களை பாடல்களின் பொருள் நோக்கிலும், பாடல்கள் பாடப் படும் வகை நோக்கிலும் கீழ்வருமாறு வகைப்படுத்தலாம்.

1. தெய்வ வழிபாட்டு பாடல்கள்
2. பக்திப் பாடல்கள்
3. ஆன்மீகப் பாடல்கள்
4. வைராக்கியப் பாடல்கள்
5, யோக தத்துவப் பாடல்கள்
6. தத்துவமறைப் பாடல்கள்
7. சீர்திருத்தத் தத்துவப் பாடல்கள்.

நாட்டுப்புற மக்கள் தன் மனத்தாலும், வாக்காலும், உடலாலும் உடலுறுப்புக்களாலும் செயல் பெற்றுத் தெய்வத்தைத் தொழலாயினர். இவ்வாறு செய்யும் ஒவ்வொரு செயலையும் ஒரு பயன் கருதியே செய்ய லாயினர்.

மனதால்—தெய்வச் சிந்தனை மேற்கொள்ளல், ஞானம்பெற முயலல், சமுதாயத்துமேல் அன்பு, அருள், சிந்தனை முதலியன நல்நிலைகளில் செயல்படுத்தலாகும்.

எப்பொழுதும் தெய்வத் தோத்திரப் பாடல்களைப் பாடுதல், பஜனைகள் பண்ணுதல், வேதாகமங்கள் ஆழ்வார், நாயன்மார்கள் பாடல்கள் முதலான தெய்வப் பாடல்களை மனப்பாடம் செய்தல் ஆகியன வாக்குச் செயல்களாகும்.

மனக்கட்டுப்பாட்டோடு உடல்வருத்தி தவம் மேற்கொள்ளுதல், உடலுறுப்புக்களால் ஆடியும் பாடியும் ஆண்டவனைத் தொழுதல்—மூன்றாவது வகையைச் சார்ந்ததாகும்.

### தெய்வ வழிப் பாட்டுபாடல்கள்[1]

விரதங்கள் மேற்கொள்ளுதல், நோன்பிருத்தல், வெவ்வேறு போக்கில் பூசைகள் செய்தல், தமக்கு விருப்பமான வீட்டுத்தெய்வம், குலதெய்வம், ஊர்த்தெய்வங்களுக்குத் திருவிழாக் கொண்டாடல் முதலியன நாட்டுப்புற மக்களிடத்தில் இன்றும் இருந்துவருகின்றன. இவையெல்லாம் தெய்வவழிபாட்டு அடிப்படையில் அமைந்தனவாகும். மற்றும் மரங்களையும், விலங்குகளையும் தெய்வ நிலையில் வைத்துச் செயல்படுதலும் இவ்வகையைச் சார்ந்ததே.

தெலுங்கு நாட்டுப்புற மக்கள் மகாசிவராத்திரி விரதம், கேதாரகௌரி விரதம், சாவித்திரிகௌரிதேவி விரதம், ஏகாதசி விரதம், அரிநாராயண விரதம், வரலட்சுமி விரதம், இலட்சவத்துல நோன்பு (ஆயிரம் திரிகள் நோன்பு) சூரியசந்திரர்கள் நோன்பு ஆகிய பெயர்களில் விரதங்களும் நோன்புகளும் மேற்கொள்கின்றனர். இவை தொடர்பான பாடல்கள் தெலுங்கு நாட்டுப்புற இலக்கியத்தில் சிறந்த இடத்தை பெற்றிருக்கின்றன.

வேதாகமங்களை உயர்ந்தோர் மட்டும் மேற்கொண்டுவந்தனர். இவ்வாறின்றி ஏழை எளியவர்களுமாகிய சமுதாய முழுமையையும் மேற்கொள்ளத் தக்கனவாய் யாகங்களுக்குப் பதிலாக விரதங்களும், நோன்புகளும் மேற்கொள்ளும் வழக்கம் நாட்டுப்புற மக்களிடையே வந்திருக்கலாம்.

கங்கையம்மத் திருவிழா, எல்லம்மத் திருவிழா, திரௌபதியம்மன் திருவிழா, போலம்மத் திருவிழா, மாதம்மத் திருவிழா, சௌடம்மக் கொலுவு, அங்காளம்மத் திருவிழா முதலிய (கிராமத் தெய்வங் களுகுத்) திருவிழாக்கள் செய்கின்ற பண்பாடு நாட்டுப்புற மக்களிடையே இருந்துவருகின்றது. பிள்ளைக்குத் தாய் போல் கிராமத் தெய்வங்கள் கிராமமக்களுக்குத் தாய் நிலையிலிருந்து காப்பாற்றுவதாய்க் கருதி அத் தெய்வங் களை கங்கம்மா, மாதம்மா என்று அழைத்து வருகின்றனர்.

இந்தத் தெய்வங்கட்கு வருடத்திற்கு ஒரு முறை விழா கொண்டாடுகிறார்கள். இச் செயல்கள் எல்லாம் பாடல் வடிவில் நாட்டுப்புற மக்கள் பாடி வருகின்றனர்.[2] இந்தத் தெய்வங்களுக்கு விலங்கு பலியிடுதல் இன்றும் இருந்து வருகின்றது. கங்கையம்மாளுக்கு எருமை மாட்டைப் பலியிடுதல் சில கிராமங்களில் மேற்கொள்ளப்பட்டு வருகின்றது. சித்தூர் மாவட்டத்தில் இப்பழக்கம் பெருவழக்கத்தில் உள்ளது. பலியிட்டு விலங்கின் இரத்தத்தைச் சோற்றில் கலந்து அந்தச் சோற்றைப் பயிர்களுக்குத் தூவுவர். இதனைப் பலிச்சோறிடுதல் என்று அழைப்பர். இதனால் பயிர் செழித்து வளர்ந்து நல்ல பயன் கொடுக்கும் என்பது அவர்கள் நம்பிக்கை.

இச் செய்திகள் பாடல் வடிவில் பாடப்பட்டு வருகின்றன.

**'நிலுநிலு கங்கம்மா தல்லி......**

**..............................**

**கொம்முலு திரிகின எனுபோதனு நரிகேமு''[3]**

என்ற பாடலில், தாம் நல்ல முறையில் வாழ்வதற்கு கங்கம்மா காரணம் என்பதும் ஆகவே அவளுக்கு

காணிக்கையாகக் கடாவையும், எருமை மாட்டையும், பலியிடும் செயலும் சொல்லப்படுகிறது.

ஆந்திர நாட்டில் நாட்டுப்புறங்களில் ஆண் தெய்வங்களைக் காட்டிலும் பெண் தெய்வங்களே சிறப்பிடம் பெற்றிருக்கின்றன. எண்ணிக்கையிலும் அதிகமாய் உள்ளன. இத் தெய்வங்களின் பெயர்களை நாட்டுப்புற மக்கள் தம் பிள்ளைகளுக்கு இடுகின்றனர்.

இவ்வாறு திருவிழாக்களைச் செய்வதன் மூலம் தெய்வங்களை நினைவுபடுத்தலோடு தாமும் மகிழ்வெய்தலாயினர்.

சிறுமியர்கள் மாவால் கௌரம்மா பொம்மையைச் செய்து கௌரம்மாவின் சிறப்புகளைப் பாடி, தம்மைக் காக்கும்படியாயும் விரத மாதத்தின் சிறப்புக்களைச் சொல்லும் வகையில் பாடல்கள் பாடுதல், ஆந்திர நாட்டுப்புற மக்களிடையே பெரும்பான்மையாக இருந்து வருகிறது. கன்னிப் பெண்களும் இவ்வாறு செய்தல் உண்டு. இப்பாடல்களுக்குக் கொப்பிப் பாடல்கள் என்று பெயரிட்டு வழங்குவர்.

கௌரம்மா பொம்மை வைக்கப்பட்ட ஒரு தட்டையை நடுவில் வைத்துச் சுற்றிலும் வலம் வந்து இரு கைகளால் தட்டிக்கொண்டு,

"கொப்பியாலோ கொப்பியாலோ
கொப்பியனி பாடவே வம்மா—கொப்பியாலோ"

என்று பாடிக்கொண்டே போவர்.[4] இந்தப் பாடல்கள் இறைவனின் பண்புகள் பற்றியும் அவர் மனைவி மக்கள் பற்றியும்—வினா விடையாக அமைந்திருக்கும்.

திருவேங்கடவனின் பக்திக்கு இலக்கான அன்னமய்யப் பாடல்களில் இத்தகையக் கொப்பிப் பாடல்களை மிகுதியாகக் காணலாம்.[5]

## 2. பக்திப்பாடல்கள்

தூயமனதால் ஜீவாத்மா—பரமாத்மாவை அடையச் செய்யும் முயற்சியே பக்தியாகும்.

நாட்டுப்புற மக்களின் பக்தியைத் தனிப்பட்ட நிலையிலும் காணலாம்; சமுதாய நிலையிலும் காணலாம்.

தனிப்பட்ட நிலையில்—தனக்கு விருப்பமான தெய்வத்தைப் பக்தியோடு தொழுது பரமனின் பனுவல்களையும் பண்புகளையும் அவனின் நாமங்களையும் சொல்லிச் சொல்லி வழிபடுவர்.

சமுதாய வாழ்வில் பஜனைகள் செய்தும், திருவிழாக்கள் கொண்டாடியும், நாட்டியமாடியும் கச்சேரிகள் புரிந்தும் பக்தியை மேற்கொள்வர். இச் செய்திகள் அனைத்தும் பாடல்கள் வடிவு கொண்டுள்ளன.[6]

பரிபக்குவமான பக்தி ஒன்று போதும் பிரமனை அடைவதற்கு என்பது அவர்களின் நம்பிக்கை:

கல்வியாலும், சாத்திர அறிவாலும் யோகத்தாலும்—காணமுடியாத பிரம்மத்தைப் பக்தியால் காணலாம். என்றுஆந்திர நாட்டுப்புற மக்கள் பாடிக்கொள்கிறார்கள்.

மற்றும் அவர்கள் பக்தியில்லாப் பூசையால் ஒரு பயனும் இல்லை என்ற உண்மை நிலையையும்,

பக்தியில்லாத பூசை
பொருள்கொடுக்காத பாடல் போன்றது.
அன்பு காட்டாத கணவர்போன்றது.

என்று பாடி வருகின்றனர்.

திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தார் இத்தகைய பாடல்கள் பலவற்றைச் சேர்த்துள்ளனர்.[8]

**ஆன்மிகத்தத்துவப் பாடல்கள்:**

ஆன்மீகத் தொடர்பானவை! ஆன்மீக வழி பரமாத்மாவின் தத்துவத்தை அறிந்து கொள்ளும் வழியாகும்.

நாட்டுப்புற மக்களிடத்தில் தான் நிலையற்றவன் அவன் மட்டும்தான் (பரமாத்மா) அழியாத உண்மைப் பொருள் என்ற தத்துவம் தம்மோடு ஒட்டிய உண்மை யாய் வாழ்ந்துவருகிறது. உண்மைப் பொருளைப்பற்றி வேத உபநிடதங்கள் கூறும் சாரத்தை நாட்டுபுறப் பாடல் களில் காணலாம்.

"தத்துவம் தெரியவேண்டும்
தத்துவம் தெரிந்தால்
தானேதான் பிரம்மம்"

இந்த உண்மையை உணர்த்தும் பாடல்களை அவர் கள் அன்றாடம் பாடிக்கொண்டும் தம் பணியைத் செய்து கொண்டும் வருதல் இன்றும் ஆந்திர நாட்டுப் புறங்களில் பெரும்பான்மையான இடங்களில் நிகழ்ந்துவருகிறது.[9]

இவ்வாறே நிலையற்ற மனம்—நிலையற்ற வகையில் கொள்ளும் புராண வைராக்கியம், பிரசவ வைராக்கியம்,

மயான வைராக்கியம், என்று வகைப்படுத்தப்படும் வைராக்கியத் தொடர்பான பாடல்களும் ஆந்திர நாட்டுப்புற மக்களிடை இருந்துவருகின்றன.

சமுதாயத்தில் இருக்கும் மூடநம்பிக்கைகளாகிய உருவச்சிலைகளைத் தொழுதல்; குலவேறுபாடு, மத வேறுபாடு, போலி பக்தி அகியவற்றை விளக்கி அவற்றின் நிறை குறைகளைக் கூறும் வகையிலும் ஆந்திரநாட்டு மக்களிடையே பாடல்கள் ஆதிக்கம் பெற்றுள்ளன.

"வலது வலது ராலல மொக்க வலது சோதரா
கலது லேது எனிடு மாட்ட கலக போது சிலலனோட
அலநாடு பிரகலாதுடு ஆத்ம ராமுனி பஜியின் செனு
பலமலேது விக்ரமனு பலக போது தெலிவிலோ"[15]

என்று தன் ஆத்ம பூஜையின் மேன்மையைத் தெளிவுப்படுத்துகின்ற பாடல் ஆந்திர நாட்டுப்புற மக்களால் பாடப்படுகிறது.

இத்தகைய பாடல்கள் பல ஆந்திர நாட்டுப் புறத்தாரிடம் பாடப்பட்டு வருகின்றன.

இந்த நாட்டுப்புறப் பாடல்கள் கிராம மக்களிடையே தெய்வத் தொடர்புக்குரிய மனப் பக்குவத்தைக் கொடுக்கின்றன. மற்றும் அவர்களிடத்துத் தெய்வ நம்பிக்கை, பாவபயம், அருள் உண்மை, உலகப் பொருள்கள் மேல் பற்றிலா நிலை, முதலான நற்பண்புகளைப் பெற வழிகோலுகின்றன.

மொத்தத்தில் மனிதன் ழ்வவாராங்கு வாழவழி வகுக்கின்றன.

## குறிப்பெண் விளக்கம்

1. டாக்டர். எ. பாலகிருஷ்ணாரெட்டி, ஜானபத பரமார்த்திக கேயசாகித்தியமு பக். 23 34.
2. ,, ,, பக். 35-41.
3. ஆர். யு. எஸ். சுந்தரம் —ஆந்துருல ஜானபதவிக்ஞானம். பக்-6.
4. ஜானபத பரமார்த்திக கேய சாகித்தியமு. பக்-49.
5. நேதுரிகங்காதரம்—ஜானபத கேயாலு. பக்-229.
6. காண்க. டாக்டர் பாலகிருஷ்ணரெட்டி ஜானபத பரமார்த்திக கேயமுலு பக். 65-169.
7. பூ தோட்டத்து லிங்கமூர்த்தி வசனங்கள். பக்-33.
8. எண். ஆர். 745, 1214, ஜு. 2585, 2511, 2076, (S.V.O. Libarary)
9. டாக்டர் பாலகிருஷ்ணரெட்டி, ஜானபத பரமார்த்திககேய சாகித்தியமு பக். 191-228.
10. ஆர் 745-பி. திருவேங்கடவன் பல்கலைக்கழக ஆராய்ச்சி நிறுவனத்தில்.
11. பி. இராமராஜு. தெலுங்கு ஜானபத சாகித்தியமு பக்-87.
12. எ. பாலகிருஷ்ணாரெட்டி— ஜானபத பாரமார்த்திக கேய சாகித்தியமு பக்-229.
13. ,,
14. ,, பக். 2382-256.
12. ,, பக்-376.

# பின்னிணைப்பு

**கங்கம்மா பாடல்கள்**

'அய்யோ அய்யோ அய்யய்யோ
கங்கம்ம ஜாத்திரேதொங்க முண்ட'
'ஊர்க்கி போதானு கங்கி ஊர்க்கி போதானுகங்கி
தோவலோன கங்கி எவரென்னோ செப்பாருகங்கி
நின்னு சூசேரு கங்கிஎத்துக போதாரு கங்கி

*(கங்கம்மாவை எடுத்துச் செல்வதை விளக்குவதாய் இந்தப் பாடல் அமைந்துள்ளது.)*

'திருப்பதி புரமுலோ பிரக்கியாதிதோ
நிலசிதிவே யம்ம லோகேஸ்வரி
மகிம பொகுடுடகு நாவல்ல தரமா?
நீது மாயமுனு பூலோகமுலோ
வியாபின் சிதிவம்மா! வியாபின்சி நீவு
பூஜலந்து லந்து கொனுசுன்னாவே கங்கம்மா
சதா நீகு ஜரிகே பூஜலம்மா
செப்புடகு அலிவிகாதே கங்கம்மா
மகிம பொகுடுடகு நாவல்ல தரமா
நீகு ஜரிகே வைபோகமு நேனேமங் துனுதல்லி
.................................
.................................
திருப்பதி கங்கயனுசு திரிலோகமுன பேருபடசினாவே!

(திருப்பதியில் பேரும் புகழோடும் திலவியுள்ளாய், உன் மகிமையைச் சொல்லுவதற்கு என்னால் ஆகுமா? இந்த உலகத்திலெல்லாம் பரந்துள்ளாய்; பூசைகளை ஏற்றுக்கொண்டு வருகிறாய், நாள்தோறும் உனக்கு நடக்கும் பூசைகள் சொல்லுவதற்கு அளவில்லை. உனக்குக் கிடைத்துவரும் வைபவங்களை நான் எப்படிச் சொல்வது......

திருப்பதி கங்கம்மா என்று இந்த மூன்று உலகங் களிலும் பெயர் பெற்றுள்ளாய்.)

பருவமடைந்த காதலர்கள் ஒருவருக்கொருவர் பேசுவதுபோல கங்கம்மா விழாவில் பாடும்பாடல்

'கொத்த குண்ட நீளு நீபி
கோரின மகவாடு தீபி
வாடின செருக்கந்த நீபி
பெருமாள்ள சின்னா
ஓல லாடே பாலப் பராயவுரா!
கொத்தகாதிரு காள்ளஜரிகே
கொத்தகாதிரு காள்ளஜரிகே
கொத்தகா போதாமு ராவே
கொத்த தண்ட கொனிபெடுதா
...............
பெருமாள்ள சின்னா!
வொங்கி ராகுரு தகிலேனு
வொங்கி ராகுரு தகிலேனு'

**காதலி :** புதிய குடத்து நீர் தன்மையாய்த் தித்திப்பாய் இருப்பதுபோல. கரும்புச் சாறு இனிப்பது போல—பெண்ணுக்கு அவளால் விரும்பபட்ட காதலன் இனிப்பான். பெருமாள்ள சின்னா நம் இருவருக்கும் ஓடைகளில் ஓடி ஆடும் பக்குவப் பருவமடா!

**காதலன் ;** புதுமையாய்த் திருவிழா நடக்கிறது. நாம் அந்த திருவிழாவிற்கு புதுமையாய், ஜதையாய்ப் போகலாம்வா! புதிய மாலையை வாங்கி வைக்கிறேன்.

**காதலி :** பெருமாள்ள சின்னா! எங்கள் கூரைவீட்டு கூறை மிகவும் தாழ்ந்திருக்கிறது. தலை குனிந்து வா, இல்லை என்றால் தலைக்கு கூறைப்படும்.

### தொரவேடப் பாடல்

'பலே பலே காரடி
பசவன்ன காரடி
கட்டுபோது பெத்தலகு
திட்டமைன காரடி
சந்துலேனா காரடி
சாகலோள்ள காரடி

[பலே பலே காரடி (ஜாலவித்தை),
பசவன்னாவின் காரடி
பெரியவர்களுக்குத் திட்டமான காரடி
சந்துகளில் காரடி
வண்ணானின் காரடி']

**சிறிய கங்கம்மா பாடல்**

'அதிதூர்ப்பு காடி சின்னதண்ட
தாதய்ய குண்ட கங்கம்ம
அதி தூர்க்கமந்த கொப்புதண்ட
தானிகொப்புலோன மல்லிபூவு
தாதய்ய குண்ட கங்கம்ம
நா பலகலோன்னகி பதிமந்திகி அவுனு.'

[சிறிய கங்கம்மா, கிழக்கு நாட்டைச் சேர்ந்தவள் மலைபோன்ற கொண்டைகொண்டவள், அக் கொண்டையில் மல்லிகையை அணிந்தவள், அவள் தாதய்ய குண்ட சின்ன கங்கம்மா. அவள் - இங்குப் பலகை அடிப்போர் பத்து பேருக்கு ஆவாள்.]

# நாட்டுப்புறத் தெய்வப் பாடல்கள் ஓர் அறிமுகம்

**பிராபர்த்த கர்ம பாடல் :**

'கட்டிகாதன பூர்வகர்ம எப்படிகைனா
கட்டிகுடுவக போது காசிலோன
சிவ! திகிலு படுடேகானி தீருனாவெதலு
கர்மஷேஷமுவல்ல கறுகுனு ஜன்மம்பு
ஜன்ம ஷேதுவுவல்ல செடு தைண்டு
முடுடய்முந்திரி முச்சடிதெலியக
பத்துலை உந்துரு பிராந்திதோட!

[*காசிக்குப் போனாலும் ஒருவனுக்கு வினைப்பயன் கிடைக்காது போகாது. அதனால் கவலைகொண்டு வாழ்வதால் கவலை தீருமா? வினைப்பயனுக்கு ஏற்றவாறு பிறவி அமையும், வாழ்வும் அமையும் மூடன் இதனை அறிவதில்லை.*]

**சிவராத்திரி பாடல்**

'அந்தா சிவமயமேரா மூடா!
அந்தா சிவமயமேரா மூடா!
அண்டமு சிவுடே பிண்டமு சிவுடே
சீவுடு லேனி ஜீவிதமு லேதுரா!
சிவ ஜோதியு சிவுடேரா!
நீலோ நாலோ நிபில பிராணுலலோ
நிலசி வெலுகுனதி சிவுடேரா!

சிவுடு லேனிதி தீமமுலேதுரா!
ஜீவன ஜோதியு சிவுடேரா!'

[எல்லாம் சிவமயம். அண்டமும் பிண்டமும் சிவமயம், சிவனில்லாமல் உலக உயிர்கள் இல்லை. உயிரும் சிவ மயமே. உலக உயிர்கள் அனைத்திலும் சிவனே நிலவி யுள்ளான்.]

## ஏகாதசி தொடர்பான பாடல்

'ஏகாதசி அன்னமுனு எவரு குடிசினனு
சுனகமை புட்டிசோகமுனு பொந்துரு
ஏகாதசி அன்னமுனு எவருமுட்டினனு
காகி மாம்சமுகன்ன கனிஷ்டமு
ஹரி தினமு எவருகுடினனு
அந்திய ஜாதிலோனி சாமானம்ம
பச்சிப்பானு த்ராகி பன்னாரகின்சி

[ஏகாதசி நாளில் உண்ணக்கூடாது. தவறி உண்டால் அவர்கள் நாயாய்ப் பிறப்பர். உண்ணுவது உணவன்று காக்கை இறைச்சியாகும். ஆகவே பச்சைப்பாலும், பழங் களும் உண்டு பயனடைய வேண்டும்.]

## திருவேங்கடவன் தரிசனம் வேண்டி பாடும் பாடல் :

அந்தமைன வெங்கடேஸ்வரா
கின்னு சூடாலனி உந்தி
நீ கொண்டகு ராவாலனி உந்தி
நீ திருகாண்ல சூடாலனி உந்தி
சேதிலோ டப்புலு லேவு
நே நேலாக வச்சேதி

நந்தன வனமு லந்தா
நே நேலாக நடிசேதி
ஏடு கொண்டல வெங்கடேஸ்வரா
நினு சூடாலனி உந்தி
நா கோரிக தீராலனி உந்தி
நா மனசு சூடாலனி உந்தி.

[அழகு வேங்கடவா! நின்னைப் பார்க்கவேண்டுமென்றுள்ளது, உன் மலைக்கு வரவேண்டுமென்றுள்ளது. உன்னுடைய திருநாளைக் காணவேண்டுமென்றுள்ளது, கையில் காசில்லை, நான் வருவது எவ்வாறு. உன் நந்தன வனமெல்லாம் எவ்வாறு நடப்பது, ஏழுமலை வேங்கடேஸ்வரா! நின்னைப்பார்க்க வேண்டுமென்றுள்ளது என் ஆசை தீரவேண்டுமென்றுள்ளது, என் மனம் பார்க்க வேண்டுமென்றுள்ளது.]

**பக்தியில்லாத பூசையால் பயனில்லை என்று சொல்லும் பாடல் :**

பக்தியேனி பூசலேமிடிகி ஓமனசா :
மனசா! பக்தியேனி பூசலேபிடிகி
பக்தியேனி பூசேமிடி! ஓமனசா
அர்த்தமு செப்பனி சதுவேமிடிகி
ஆசலேனி மொகுடேமிடிகி
முசலுதானிகி குனுகேமிடிகி
பக்திலேனி பூசலேமிடிகி.

[ஏ மனமே! பக்தியில்லாப் பூசைகள் தேவையில்லை: பொருளில்லாப் படிப்பு எதற்கு. மனைவிமேல் அன்பில்லாத கணவன் எதற்கு. கிழவிக்கு ஒப்பாரம் தேவை இல்லை—என்று மனத்திற்குச் சொல்லுவதாய்ப் பக்தி எவ்வாறு இருக்க வேண்டும் என்பதை சொல்லுகிறது இந்தப் பாடல்.]

## கொப்பிப் பாடல்

| | | |
|---|---|---|
| கொப்பியன்ளோ | — | சந்தெ கொப்பே மா<br>சுபமுலிவ்வாவே |
| கொப்பியன்ளோ | — | தாமர பூவண்டி தம்முண்டி<br>இவ்வாவே |
| கொப்பியன்ளோ | — | சேமந்தி பூவண்டி<br>செல்லின்னி இவ்வாவே |
| கொப்பியன்ளோ | — | மொகுலி பூவண்டி<br>மொகுடு இவ்வாவே |

[கொப்பியள்ளோ—எங்களுக்கு நலமே அமைய வேண்டும்—தாமரை போன்ற தம்பியைக் கொடுக்க வேண்டும். சேமந்தி பூ போன்ற தங்கையைக் கொடுக்க வேண்டும். தாழைப் பூ போன்ற கணவன் கிடைக்க வேண்டும்.]

## நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு முறை —தொகுப்பு

இந்தப் பகுதியில் இதுவரை சொல்லப்பட்ட கிராமத் தெய்வங்களின் வழிபாடுகள் அடிப்படையில் நாட்டுப்புறத் தெய்வ வழிபாடுகளில் அமைந்துள்ள பொதுமை முறைகள் தொகுத்துச் சொல்லப்படுகின்றன.

கிராமத் தெய்வங்களின் வழிபாடுகள், அந்தக் கிராமங்களின் நலத்தையும், தனிமனிதனின் நலத்தையும் நோக்கமாகக் கொண்டு அமைந்தவை. கிராம மக்களின் நோய் நொடி தீர்க்கவேண்டியும், கிராமம் எல்லாவகையிலும் நலமாய் வளமாய்த் திகழ்வதற்கும்—கிராமமக்கள், அந்தக் கிராமத்துக் குரிய கிராமத் தெய்வங்களை வழிபட்டனர். கிராமத் தெய்வங்களையேன்றி—குறிப்பிட்ட சில வீட்டார் தமக்குரிய வீட்டுத் தெய்வங்களையும்—தம் வீட்டில் தனிப்பட்ட ஒருவரின் நலத்துக்காக வழிபடலாயினர். எனவே கிராமத் தெய்வங்கள் வேதநெறி கடவுள் போன்று உலகத் தெய்வங்களாகக் கருதப்படவில்லை, நாட்டுப்புறத் தெய்வங்கள் வழிபாட்டுத் முறையில் மக்களின் தேவைகள் இருக்கும். அவர்களின் தேவைக்குத் தகுந்தவாறு அவற்றில் மாறுபாடு ஏற்படும். முக்கியமான தேவையாய் இருந்தால் அது நடைமுறைப் படுத்தப்படும். அதுவே மரபாக்கப்படும் வழிமுறையினரும் அதைப் பின்பற்றி வருவார்கள். ஆகவே நாட்டுப்புறத் தெய்வங்கள் மக்களின் நண்பர்களாகத் திகழ்கின்றன.

திராவிடத் தெய்வங்களின் உருவங்கள் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமாக இருக்கின்றன.

"ஊர்வாழ வேண்டி ஊர்த் தெய்வங்களும்,
இனம் வாழ வேண்டி இனத் தெய்வங்களும்,
குடும்பம் வாழ வேண்டி சமாதித் தெய்வங்களும்,
குலம் வாழ வேண்டி குலத்தெய்வங்களும்,"

தொழப்பட்டு வந்தன, வருகின்றன.

நாட்டுப்புறச் சமயம் என்பது, ஆரவாரத்தோடு கூடிய வழிபாடுகள் கொண்ட, வரன்முறையில்லாத வழிபாடுகள் கொண்ட, கண்மூடித்தனமாய் பண்டுதொட்டு வருகின்ற பழக்கத்தை மாற்ற விரும்பாத, பாமரத்தன்மையான வழிபாடுகள் கொண்ட கொள்கைகள் தான் நாட்டுப்புறச் சமயமாகும்.

நாட்டுப்புறத் தெய்வங்களைச் சிறு தெய்வம் என்றும் (சிறுநெறி) செம்மைப்பட்ட ஆகமவிதிகளின்படி முறையோடு நடக்கும் நெறியைப் பெருந்தெய்வம் என்றும் (பெருநெறி) அழைப்பார்கள்.

கிராமத் தெய்வங்கள் என்றால் திராவிடத் தெய்வங்கள் என்று கொள்ளப்பட்டது. இத்தெய்வங்களை வழிபடுவோரின் சமயம் திராவிடச் சமயமாகும். தென்னிந்தியாவில் 80%க்கும் மேற்பட்டவர்கள் திராவிடச் சமயத்தைச் சேர்ந்தவர்கள்.

திராவிடத் தெய்வங்களாகிய நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபடுதலைக் கோயில் கும்பிடுதல் என்று சொல்லுவார்கள். இந்தத் தெய்வங்களுக்கு நித்திய பூசை நடை, பெறுவதில்லை, ஆண்டுக்கொரு முறை விழா நடத்துவர். குறிப்பிட்ட ஒரு மாதத்தில் இன்ன நாளில் நடத்தவேண்டும் என்று கிராமமக்கள் கூடி முடிவு செய்வார்கள். பெரும்பான்மையும் கோடைக்காலத்திலேயே நடைபெறும். அந்தச் செய்தியை கிராமமக்களுக்கு வண்ணான் மூலமாகத் தெரிவிப்பார்கள். அந்த நாளில் விழாவை நடத்துவர். பொதுவாகச் செவ்வாய், வெள்ளிக் கிழமைகளில் பெண் தெய்வங்களுக்கும், மற்ற நாட்களில் ஆண் தெய்வங்களுக்கும் விழா நடக்கும். பெரும்பாலும் ஆண் தெய்வங்களுக்கு வரையறை இல்லை. இவ்வாறு ஆண்டுக்

கொரு முறை நடத்துவதோடு ஊர் வறுமையில் துன்பப்படும் பொழுது அத் துன்பத்தினின்று நீக்கவும், ஊரில் மழை நன்கு பெய்து விளைச்சல் அமோகமாக வரும்போது— நன்றியைச் செலுத்தும் நோக்கிலும் அந்தந்தச் சந்தர்ப்பங்களில் அந்த ஊர் கிராமத் தெய்வங்களுக்கு விழா நடத்துவர். அப்பொழுது அவரவர்கள் செய்துகொண்ட பிரார்த்தனைகளைத் தீர்த்துக் கொள்வார்கள்.

சில கிராமங்களில் தாம் விழா நடத்த முடிவு செய்த நாளை உறுதிப்படுத்த கோயிலுக்குச் சென்று தெய்வத்தினிடம் அனுமதி கேட்பார்கள். இந்த அனுமதி கேட்கும் முறை பல விதங்களில் அமையும். பல்லி சகுனம் கேட்டல் ஒரு முறை யாகும். பூ கட்டிப் பார்க்கும் முறையும் உண்டு. வெள்ளைப்பூ ஒரு இலைச் சுருளிலும், சிவப்புப்பூ ஒரு இலைச்சுருளிலும் கட்டிப் போடுவார்கள். ஒரு சிறு குழந்தையை அழைத்து ஏதாவது ஒன்றை எடுக்கச் சொல்லுவார்கள். வெள்ளைப்பூ வந்தால் விழா நடத்த அனுமதி தந்ததாக உறுதி கொள்வர். சிவப்புப்பூ வந்தால் அனுமதி தரவில்லை என முடிவு கொள்வர் எப்பொழுதும் வெள்ளைப்பூ தான் வரும். சிவப்புப் பூ வருவது அருமை. ஊரில் ஏதாவது சச்சரவு இருந்தால் மட்டும் சிவப்புப் பூ வருவதாகச் செய்தி உண்டு.

விழா நடத்துவதற்கு ஆகும் செலவிற்கு வீட்டிற்கு இவ்வளவு என்று நிர்ணயித்து வசூல் செய்வார்கள். அந்த வீட்டுப் பொருளாதார நிலைக்கேற்றவாறு வசூல் செய்வார்கள். இவற்றை எல்லாம் முன்னிருந்து நடத்துவதற்கு 'கோயில் குழு' என்றிருக்கும். அந்தக் குழுவில் இருப்போர் பொறுப் பேற்றுக்கொண்டு விழாவை நடத்துவர். இந்தக் குழுவில் மானியக்காரர் தலைமையாய் இருப்பார்.

சில தெய்வங்களுக்குப் பொங்கலிடும் பழக்கம் உண்டு. வீட்டிலிருந்து அரிசி முதலிய பொங்கலிடுவதற்கு வேண்டிய பொருட்களைக் கொண்டு செல்வார்கள். பொங்கலிடும் சமயம் விரதமிருந்து, குளித்துவிட்டு, பொங்கல்கூடையைத் தலையில்

வைத்துக் கொண்டு செல்லுவர். கோயிலின் அருகில் பொங்கலிடுவார்கள். அங்கிருக்கும் கற்களில் மூன்றைச் சேர்த்து அடுப்பாக்கிப் பொங்கலிடுவார்கள். பொங்கல் சரியாகப் பொங்கி வரவேண்டும். அவ்வாறு சரியாகப் பொங்கிவந்தால் சாமிக்கு ஆகும் என்றும், பொங்கலிடுவோர் மேல் தெய்வதற்கு எந்தக் குறையும் இல்லை என்பது அர்த்தம். சரியாகப் பொங்கி வரவில்லை என்றால் சாமிக்கு ஆகாது என்பது அர்த்தம். பொங்கலிடுவோரிடத்து ஏதோ குறை உண்டு என்பது பொருள். அந்தக் குறையை மீண்டும் பிரார்த்தனை செய்துகொண்டு குறையைத் தீர்த்து அருள வேண்டும் என்று வேண்டிக் கொள்ளுவார்கள். அடுத்த வருஷம் இரண்டு பொங்கலிடுவ தாகவோ, வேறு வகையிலோ, பிரார்த்தனை செய்து கொள்ளுவார்கள். நைவேத்தியம் செய்தல்; பூசை செய்தல்- செயல்களை அக் கோயில் பூசாரி செய்வான்.

பொங்கலிட்டபின் பொங்கல் பானையிலிருந்து ஒரு கரண்டி சாதத்தைச் சாமிக்கு நைவேத்தியம்செய்து மீதத்தை வீட்டுக்குக் கொண்டு சென்று எல்லோருக்கும் பிரசாதமாகஜ கொடுப்பார்கள்.

'நாகுல் சவிதி' போன்ற சிறப்பு நாட்களில் மாவிளக் கேற்றலும் முளைப்பாரி போடலும்' நடைபெறும். மாவிளக் கேற்றல் என்பது பச்சரிசியை ஊறவைத்து மாவாகச்செய்து மாவை உருண்டை செய்து உருண்டை நடுவில் குழிசெய்து நெய் ஊற்றித் திரியிட்டு விளக்கேற்றலாகும். இதனை வேத நெறி கடவுளரை வீட்டில் கும்பிடும்போதும், இறந்தவர் நினைவு நாளைக் கும்பிடும்பொழுதும் செய்வதுண்டு. முளைப் பாரி போடல் என்பது கம்பு அல்லது அரிசி அல்லது பச்சைப் பயறு—இவற்றில் ஒன்றை முன்னாளே ஊரவைத்து—அதில் வெல்லத்தைக் கலப்பது. இதனைச் சாமிக்கு வைத்து நைவேத்யம் செய்கின்ற பழக்கம் உண்டு.

ஆயிரங்கண் பானை எடுத்தல், வேடம் தரித்துக் கும்பிடல்; கடாவெட்டல் போன்ற செயல்கள் சிறப்பாகக் கங்கம்மாவிற்கு

நடைபெறும் (திருப்பதிகங்கம்மா பற்றிய செய்திகள் காண்க) கடா வெட்டும் பழக்கம் சங்க காலத்திலேயே இருந்தாக அகப் பாடல் ஒன்று கூறுகின்றது. (அகம்-156)

கடா வெட்டும் பழக்கம் குலதெய்வங்களுக்கும் (முனீஸ்வரன், காட்டேரி)நடைபெறுவதுண்டு குழந்தைகளுக்குக்காது குத்தும் போதும், தலை மயிர் எடுக்கும்போதும் கடாவை வெட்டிப் பூசைசெய்து பிரார்த்தனை செய்துகொள்ளுவார்கள். இந்தக் குலதெய்வங்களுக்கு உறவினர் எல்லோரும் வருவர். சில வீட்டார் அன்று ஊரில் வீட்டுக்கொரு ஆளை அழைத்துச் சாப்பாடு போடுவர். இவ்வாறு செய்கின்ற இந்தப் பழக்கம் உறவினரோடு மேலும் தொடர்புகொள்ள வாய்ப்பு நல்குவதோடு ஊர் மக்கள் பகைமையின்றி ஒற்றுமையாக வாழ்வதற்கும் வழிகாட்டுகிறது. இதற்குள் ஏதாவது ஒருவருக்கொருவர் பகைமை கொண்டிருந்தாலும் இந்த நிகழ்ச்சியின் போது அழைப்பார்கள். இதனால் பழைய பகைமைபோய் நட்பு ஏற்படும். கிராமங்களில் விழாக்கள் செய்வதற்குரிய காரணங்களில் இதுவும் ஒன்று.

நாட்டுப்புறத் தெய்வ வழிபாட்டு முறைகள் எல்லாப் பகுதிகளிலும் பெரும்பான்மையாக ஒரே மாதிரியாக இருக்கும். ஒரு சில வேறுபாடுகளும் இருக்கும்.

இவற்றால் நாட்டுப்புறத் தெய்வ வழிபாடு வேதநெறி கடவுளர் வழிபாட்டினின்று மாறுபட்டது என்பது தெரிகிறது. பெரும்பான்மையாகக் கோடை காலத்திலேயே வருஷத்துக்கொரு முறை நாட்டுப்புறத் தெய்வங்களுக்கு, விழா நடக்கிறது. கோடைக் காலம்—கிராமமக்கள் பொதுவாக ஓய்வாக இருக்கும் காலம். ஆகவேதான் சிறப்பாக அந்தக் காலத்திலேயே விழாக்கள் நடக்கின்றன. மற்ற காலங்களில் நடைபெறுவது அப்போதைக்கப்போது தேவையைப் பொறுத்தது. நாட்டுப்புறத் தெய்வங்களின் பூசாரிகளாக பிராமணர் அல்லாதோரே இருப்பர்.

பின்னிணைப்பு—3

# சில சிறப்புச் செய்திகள்

பக்கம் 4— நம்பிக்கைகள் :—

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு மக்களால் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இந்த நம்பிக்கைகள் காலங்காலமாக ஒரு தலைமுறையிலிருந்து இன்னொரு தலைமுறையினருக்குப் பரவி வருகின்றன. மனிதனின் பிறப்பு முதல் இறப்புவரை பல நிலைகளில் பலவிதமான நம்பிக்கைகள் அவனிடையே இருந்துவருகின்றன. ஒரு வளர்ச்சி அடைந்த மனிதனிடம் பல ஆயிரக்கணக்கான நம்பிக்கைகள் இருந்துவருவதாகச் செய்தி உண்டு.

இந்த நம்பிக்கைகள் பெரும்பான்மையாகக் கிராம மக்களிடையே இருந்துவருகின்றன. சிறப்பாகக் கடவுளர் தொடர்பான நம்பிக்கைகள் கிராம மக்களிடத்தில் பெரும்பான்மையாக இடங்கொண்டிருக்கின்றன. 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்ற பழமொழி கிராம மக்களிடையே கடவுள்மேல் இருக்கும் நம்பிக்கையின் ஆழத்தைக் காட்டுகிறது.

பக்கம் 4— குலமதங்கள் :—

சித்தூர் மாவட்டத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் வாழும் மக்கள் பெரும்பாலும் இந்துமதம், கிறித்துவமதம் இசுலாமிய மதம்—என்னும் மூன்று மதங்களைச் சேர்ந்தவர் கள். இந்த மூன்று மதங்களில் இந்து மதத்தினரே பெரும் பான்மையினர். இவர்கள் பல சாதியைச் சேர்ந்தவர்கள்.

சித்தூர் மாவட்டம் அதன் சுற்றுப்புறங்களிலுமுள்ள இந்து மதத்தைச் சேர்ந்த சாதிகள் ஏறக்குறைய நூறு (100) என்று கணக்கிட்டுள்ளனர்.

இந்த மூன்று மதங்களில் இந்து மதத்தைச் சேர்ந்தவர்களே கிராமத் தெய்வங்களை வழிபட்டு வருகின்றனர். கிறித்தவரும், இசுலாமியரும் அவரவர் கடவுளர்களை வணங்கி வழிபட்டு வருகின்றனர்.

பக்கம் 11— பரசுராமர் கதை :—

பரசுராமர் கதை சிறிது மாறுதல் பெற்றுள்ளமை இங்குக் கருதத்தக்கது.

பக்கம் 23— அன்னமாச்சாரியார் :—(அன்னமய்ய)

இவர் ஆந்திர மாநிலம் கடப்பை மாவட்டம் இராசம் பேட்டை வட்டத்திலுள்ள தாளப்பாக்கம் கிராமத்தவர். இவர் காலம் 1423—1503. இவர் மறையவர். பெற்றோர் வழியில் அன்னமய்யாவும் திருவேங்கடநாதனிடம் பிள்ளைப் பருவம் முதற்கொண்டே பேரார்வத்தவராய் விளங்கினார். திருவேங்கடநாதனின் பெரும் பக்தராய்த் திகழ்ந்தார். பதினாறு வயதிலேயே திருவேங்கடத்தான்மீது பாடத் தொடங்கினார். இவர் ஒரு பக்தர் மட்டுமல்ல, சிறந்த கவிஞரும்கூட. பண்ணிசைத்துப் பாடும் திறனும் பெற்றிருந்தார். இவர் முப்பத்திரண்டாயிரம் (32,000) இன்னிசைப் பாடல்களைத் திருவேங்கடத்தான் மீது பாடியுள்ளார். அவற்றுள் பல நாட்டுப்புறப் பாடல் போக்குடையனவாகும். இவையேயன்றி வேறுசில நூல்களும் இயற்றியுள்ளார்.

பக்கம் 25— போலேக்காரன் :—

தமிழகச் சிற்றூர்களில் பணிபுரியும் தலையாரியைப் போன்ற தெலுங்கு நாட்டுக் கிராமப் பணியாளன் இவன்.

பக்கம் 29—ஜாடித்தல்—உதிர்த்தல்

பக்கம் 31—காப்புக் கட்டுதல்:—

கிராமத் தெய்வ விழா நாட்களை வரையறை செய்த லாகும். இந் நாட்களில் கிராமத்து மக்கள் வேறிடத்துக்குப் போகக்கூடாது என்ற வழக்கு உண்டு.

பக்கம் 27—சாற்று நடைபெறுதல் :—

ஆகவே, அதை ஊருக்கு அறிவிக்கும் நோக்கில் கங்கம்மா திருவிழா நடப்பதற்கு முன்வாரம் செவ்வாய்க் கிழமை இரவு பறையடித்துக்கொண்டு ஊர் முழுவதும் இந்த நாள் திருவிழா நடக்கும் என்று அறிவிப்பர். இவ்வாறு செய்வதற்குச் சாற்று வைத்தல் என்று பெயராகும்.

பக்கம் 40—பண்ட்ரோத் வேடம் :—

பண்ட்ரோத்—சொல்லுக்கு வேலைக்காரன் என்பது பொருள். உடம்பெல்லாம் சந்தனம் பூசிக்கொண்டு முகத்துக்கு அழகு செய்து, தலைக்கு ரிப்பன் (பட்டுநாடா) கட்டிக் கொண்டு வேடம் போடுவர். இப்படி வேடம் போட்டவர்கள் 10, 15, 20—பேர் குழுவாய்க் கூடி பறை அடிக்க கங்கம்மாவை பழிச்சொற்களால் பாடிக்கொண்டே ஆடுவர். இவர்கள் உடம் பெல்லாம் சந்தனம் பூசிக்கொள்வதால் இந்த வேடத்தைச் சந்தன வேடம் என்றும் கூறுவர்.

பக்கம் 42—ஏழு கங்கம்மா உருவங்கள் :—

சிலம்பில் இடம் பெறும் பத்தினிப் பெண்டிர் 'எழுவர்' என்ற செய்தியும் இந் நூலில் வரும் 'ஏழு கன்னியர்' என்ற கருத்தும் இதனோடு ஒப்பிட்டு ஆராய்தற்கு உரியன.

பக்கம் 43—பூன் :—

நகை வேழம்பன், விகடன்—என சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படுகின்றவன்.

**பக்கம் 45—சந்தான தெய்வம் :—**

பிள்ளைப் பேற்றை அருளும் தெய்வம்.

**பக்கம் 71— கதை யுத்தம் :—**

'*கதை*' என்னும் ஆயுதத்தால் செய்யும் யுத்தம்.

## மெரிகால் ஆட்டம் (*மிதிகால் ஆட்டம்*) : —

இரண்டு முழம் அளவுள்ள லேசான உறுதியான ஒன்பது அங்குலச் சுற்றளவு உள்ள இரண்டு கட்டைகளால் ஆவது மிதிகால் ஆட்டம். இந்த இரண்டு கட்டைகளுக்கு மேற்பகுதியில் ஒரு முழம் அளவு வரை பாதிக் கட்டையை நெடுக்காக எடுத்துவிடுவர். அப்பொழுது கட்டையின் பாதியில் பாதத்தின் ஒரு பகுதியை வைத்துக் கொள்ள வசதியாய் இருக்கும். அந்த பாதிப்பகுதியில் பாதத்தை வைத்து நூல் நாடாவால் காலை மேற்பகுதி கட்டையோடு சேர்த்துக் கட்டுவர். இந்த கட்டைகளுக்கு மிதிகால் கட்டைகள் என்றும் இந்த கட்டைகளைக் கட்டிக் கொண்டு ஆடும் ஆட்டத்திற்கு மெரிகால் ஆட்டம் (மிதிகால் ஆட்டம்) என்றும் வழங்குகிறார்கள். இந்த ஆட்டத்தைச் சிறுவர்களும் அவ்வப்போது விளையாட்டாக ஆடுகின்ற பழக்கமும் உண்டு. இந்த ஆட்டத்தைக் கங்கம்மா திருவிழாவின்போது ஆடுகிறார்கள்.

## துணை நின்ற நூல்கள்


1. ஆந்துருல ஜானபத விக்ஜானம்
R.V.S. சுந்தரம்
ஆந்திரப் பிரதேஷ் சாகித்திய அகாடமி
களாபவன், ஹைதராபாத்.

2. ஜானபத கேயாலு—சாங்கிக சரித்திர
டாக்டர் பி. இராமராஜு
டாக்டர் ஸ்ரீமதி நாயணி கிருஷ்ணகுமாரி
ஆந்திரப்பிரதேஷ் சாகித்திய அகாடமி
களாபவன். ஹைதராபாத்.

3. தெலுகு பண்டுகலு—
ஸ்ரீமதி. ராமச்சந்திர
ஆந்திரப்பிரதேஷ் சாகித்திய அகாடமி
களாபவன், ஹைதராபாத்.

4. தமிழரின் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
அடையார், சென்னை-20. 1982

5. *Villege Gods of South India*
**Henry White Head.**
**Sumit Publications**
**Delhi-110 052. 1976.**

# பிழை திருத்தம்

| பக் | பத்தி | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 8 | 8 | 4 | மொழியில் | மொழியியல் |
| 10 | 1 | 2 | இருந்தன | இருந்தனர். |
| 12 | 3 | 2 | இறைமை | இறைமைத் தன்மை |
| 18 | 1 | 1 | பூசல் | பூசுதல் |
| 18 | 2 | 4 | காட்ரேடு | காட்டேறு |
| 19 | 1 | 3,4 | தாள்ளபாக்க கங்கை யம்மா என்றும் | தாள்ளபாக்க கங்கையம்ம |
| 19 | 1 | 4 | சின்ன கங்கையம்மா | சின்ன கங்கையம்மா என்றும் |
| 28 | 2 | 1 | ஒவ்வொரு கிராமங்களிலும் | ஒவ்வொரு கிராமத்திலும் |
| 28 | 2 | 2 | தனிப்பட்டக் கோயில் | தனிப்பட்ட கோயில் |
| 30 | 4 | 3 | வண்டிக்குப் பச்சைக் கீற்றுக்களால் | வண்டிக்குப் பச்சைத் தென்னங் கீற்றுக்களால் |
| 30 | 4 | 5 | எருது;களுக்கும் | எருதுகளுக்கும் |
| 31 | 1 | 4,5 | வெள்ளி கிழமைகளில் மக்கள் வணங்குவர் | வெள்ளிக் கிழமைகளில் வணங்குவர் |
| 32 | 2 | 1,2 | நடுப்பகலில் பொழுதில் | நடுப்பகலில் |
| 33 | 4 | 1 | நோக்கமே | நோக்கம் |
| 37 | 4 | 1 | நாட்டுப்புற சிறு தெங்களைக் | நாட்டுப்புறச் சிறு தெய்வங்களைக் |
| 44 | எண் | 7 | திரெளபதியம்ம | திரைபெதியம்ம |
| 62 | 2 | 2 | தொழுத்வதோடு | தொழுவதோடு |
| 73 | 2 | 2 | நிலையை | நிலை |
| 78 | 2 | 4 | வழிப்பாட்டு பாடல்கள் | வழிபாட்டுப் பாடல்கள் |